முதல் எட்டு கட்டுரைகளும் சென்னை ரேடியோவில் பேசியவை. புத்தகத்தில் சேர்த்துக் கொள்ள அனுமதி கொடுத்த ரேடியோ நிலையத்தாருக்கு என் நன்றி.

நாடோடி

## நாடோடி எழுதிய நூல்கள்

நாடகமே உலகம்
இதுவும் ஒரு பிரகிருதி
பிழைக்கும் வழி
ஒரு நாள் கூத்து
படித்த பெண் வேண்டாம்
அட பரமசிவா
எங்கள் குடும்பம் பெரிது
ஹே, அனுராதா
என்னைக் கேளுங்கோன்னு
குடும்ப ரகசியம்
முடியாத யுத்தம்
ஸ்திரீகள், ஜாக்கிரதை !
கிழவியும், குமரியும்

# ஐயா, பொதுஜனம் அவர்களே!

வெகு நாளாகவே தங்களிடம் ஒரு விஷயத்தை நான் சொல்ல வேண்டும் என்று இருந்தேன். அதற்கு இப்பொழுது தான் சௌகரியம் கிடைத்தது.

நான் எழுதும் கட்டுரைகள் எல்லாம் கிட்டத்தட்ட என்னைப் பற்றித்தான் இருக்கின்றன, என் மனைவி சரசுவைப் பற்றித்தான் இருக்கின்றன, என் பெண் அனுவைப்பற்றித் தான் இருக்கின்றன, அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைப் பற்றித் தான் இருக்கின்றன என்று சிலர் குறைப்படுவதாகத் தெரிகிறது.

"எப்பொழுது பார்த்தாலும் உங்கள் மனைவி சரசுவைப் பற்றித்தானா எழுதிக் கொண்டே போக வேண்டும்? என் மனைவி பிடிக்கும் அடம் துளிகூடச் சகிக்க வில்லையே. அவளை உங்கள் கட்டுரைகளில் இரண்டு வாங்கு வாங்கக்கூடாதா?" என்று பரிதாபமாக எழுதிக் கேட்கிறார் தம் மனைவியைக் கண்டு நடுங்கும் ஒரு தொடை நடுங்கி ஆசாமி.

"ஐயா! உங்கள் அனுதான் ரொம்பக் கெட்டிக்காரக் குழந்தை, விஷமத்தனம் பண்ணுகிறாள் என்று நினைக்காதேயும். எங்கள் காமுக்கு முன்னால் உங்கள் அனு எங்கே? அவளைப் பற்றி நான்கு கட்டுரைகள் எழுதுவதற்கென்ன?" என்று வெகு கோபமாகக் கேட்கிறார் ஒரு காமுவின் தகப்பனார்.

"ஏன் ஐயா! உமக்கு என்ன குறுகிய திருஷ்டியோ! எப்பொழுது பார்த்தாலும் இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைப் பற்றியே எழுதுகிறீரே! அந்தப் பாழும் மனிதன் அடுத்த வீட்டிலேயே இன்னும் எத்தனை நாளைக்கு இருந்து தொலையப் போகிறார். எல்லாருக்கு வரும் 'எவிக்ஷன் ஆர்டர்' அவருக்கும் வர!" என்று பாவம் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருக்குச் சாபம் கொடுக்கிறார் இன்னொரு ஆசாமி.

"ஏன் ஐயா, அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர், அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் என்று அய்யரைப் பற்றியே எழுதிக் கொண்டு போகிறீர்! அய்யரல்லாத எங்களைப்

பற்றியும் எழுதப் போகிறீரா, அல்லது..........................................."
என்று எழுதிக் காண்பிக்க முடியாத வார்த்தைகளில் வசை புராணம் படிக்கிறார் ஒரு அய்யரல்லாத நண்பர்.

இன்னும் எத்தனையோ ஸ்திரீகளும், புருஷர்களும் என்னைப் பார்க்க வருகிறார்கள். தங்களைப் பற்றியும் ஏதாவது எழுதமாட்டாரா என்று அவர்களுக்கு ஆசை! அதற்காக, "ஐயோ! இவரிடம் ஜாஸ்தி பேசக்கூடாது. பேசினால் நம்மைப் பற்றியும் ஏதாவது எழுதி விடுவார்" என்று தங்களைப் பற்றி எழுதும்படி சொல்லாமல் சொல்லுகிறார்கள். அவர்களை நான் கவனிப்பதற்காக ஏதாவது கோனஷ்டையாகப் பேசுகிறார்கள், அல்லது கோனஷ்டையாக நடக்கிறார்கள்.

கடைசியில் தங்களைப் பற்றி ஏதாவது வந்திருக்கிறதா என்று உன்னிப்பாக என் கட்டுரைகளைப் படித்துப் பார்க்கிறார்கள். ஆனால் திரும்பவும் என்னைப் பற்றியும், சரசுவைப் பற்றியும், அனுவைப் பற்றியும், அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைப் பற்றியும் தான் ஏதாவது வருகிறதே யொழிய அவர்களைப் பற்றி ஒன்றும் வருவதில்லை. இதனால் அவர்கள் கொள்ளும் கோபத்திற்குக் கணக்கில்லை.

ஆனால் உண்மையில் இம்மாதிரி என்மீது கோபமோ அல்லது வருத்தமோ யாரும் கொள்ளுவதற்கு இடமில்லை. நான் என்னைப்பற்றியே எழுதுவதாக இவர்கள் நினைக்கும் எண்ணத்தைப் போல் தவறான எண்ணம் வேறு ஒன்றும் கிடையாது. என்னுடைய அனுபவத்தில் நான் காணும் எத்தனையோ விதம் விதமான மனித சுபாவங்களைப் பற்றித் தான் நான் எழுதி வருகிறேன். ஆனால் ஒவ்வொரு சமயமும் வெவ்வேறு ஊர், வெவ்வேறு பெயர்கள் கொடுத்து அன்பர்களின் கழுத்தை அறுக்காமல் எல்லாப் பழியையும் என் தலை மீதே போட்டுக் கொள்ளுகிறேன். எல்லா அனுபவங்களையும் எனக்கு ஏற்பட்டதாகவே கொண்டு எழுதுகிறேன்.

இல்லாவிடில் கார் வாங்கலாமா அல்லது வீடு வாங்கலாமா என்று ஒரு கட்டுரையில் சரசுவுடன் தர்க்கித்துக் கொண்டிருக்கும் நான் அடுத்த கட்டுரையில் அடுத்த வீட்டு அண்ணுசாமியிடமிருந்து வாங்கிய பத்து ரூபாய்க்கடனை திருப்பிக் கொடுக்க முடியாமல எப்படி ஒளிந்து கொள்ளுவது என்பதைப் பற்றி யோசிப்பேனா?

ஒரு கட்டுரையில் கல்யாணத்திற்கு நிற்கும் பெண்ணுக்கு வரன் தேடுவதைப்பற்றி கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் நான் அடுத்த கட்டுரையிலேயே என் பெண் அனுவுக்கு இன்னும் தவழக்கூட தெரியவில்லை என்று எழுதுவேனா ?

ஆகவே நாடோடி அன்பர்களை யெல்லாம் ஒன்று கேட்டுக் கொள்ளுகிறேன். என் கட்டுரைகளை வாசிக்கும் போதெல்லாம் 'நான்' என்ற இடத்தில் தங்கள் பெயரையும் 'சரசு' என்ற இடத்தில் தங்கள் மனைவியின் பெயரையும் 'அனு' என்ற இடத்தில் தங்கள் அருமைக் குழந்தையின் பெயரையும், 'அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர்' என்ற இடத்தில் தங்கள் பக்கத்து வீட்டுக்காரரின் பெயரையும் போட்டு மாற்றி வாசிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். அப்பொழுது நான் என்னைப்பற்றி எழுதிக் கொள்ளவில்லை, எல்லாரையும் பற்றித் தான் எழுதுகிறேன் என்று அவர்களுக்குத் தெரியவரும்.

கடைசியாக ஒரு வார்த்தை. நான் சுயசரிதம் எதுவும் எழுதாமல் விட்டுப்போய் பின்னால் யாராவது என் சரிதத்தை எழுத முற்பட்டால் என் புஸ்தகங்களில் உள்ள விஷயங்களை ஆதாரமாகக் கொள்ளவேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அந்த ஆதாரங்களைக் கொண்டு பார்த்தால் சரசு ஒரு பயங்கரப் பிரகிருதியாகத்தான் தோற்ற மளிப்பாள். உண்மையிலேயே அவள் அப்படி இருந்தால் நான் இன்னும் அவளுடன் மணவாழ்க்கை நடத்திக்கொண்டு இருப்பேனா ? ஔவைப் பாட்டி சொன்னாளே "கூறாமல் சந்நியாசம் கொள்" என்று, அதைப் பின்பற்றி இருக்க மாட்டேனா ?

தியாகராயநகர்
18-12-47

நாடோடி

# பொருளடக்கம்

அட அசட்டு மனுஷா! உம்மைப்போல் பயித்தியக்கார மனுஷரை நான் இதுவரையில் பார்த்ததில்லை. இந்த யுத்தம் வந்தாலும் வந்தது, நீங்கள் போட்டுக் கொண்டிருந்த பழைய யுத்தத்தை மறந்துவிட்டீர்களே?

"யுத்தமா? நானா? யாருடன்?" என்றெல்லாம் கேட்கிறீர்கள் அல்லவா? உங்களைக் குற்றம் சொல்லிப் பிரயோசனம் இல்லை. ஆறு வருஷமாக நடந்த அந்தப் பாழும் யுத்தம் உங்கள் ஞாபகங்களைச் சிதற அடித்து விட்டது.

ஆனால் அதற்குமுன் நீங்கள் சும்மா இருக்கவில்லை. பெரிய யுத்தத்தில்தான் ஈடுபட்டிருந்தீர்கள். என்ன! இப்பொழுதாவது ஞாபகம் வருகிறதா?........என்ன இன்னும் வரவில்லையா? என்ன, இத்தனை அசடா யிருக்கிறீர்களே?

உலகம் ஆரம்பித்தது முதற்கொண்டு, விடாமல் ஒரு யுத்தம் எல்லார் வீட்டிலும் நடந்துகொண்டு வருகிறதே ஐயா?..........ஆம், அந்த யுத்தம்தான். புருஷன் மனைவி யுத்தம்தான்.

....என்ன, மறந்து விட்டதா? மனைவியுடன் எப்படிப் போர் தொடுப்பது என்பதே மறந்துவிட்டதா?

எனக்கு அப்பவே தெரியும். எப்பொழுது இந்தச் சனியன் பிடித்த ஜெர்மன் யுத்தச் செய்திகளையும், ஜப்பானிய யுத்தச் செய்திகளையும் விழுந்து, விழுந்து படித்தீர்களோ, அப்பொழுதே எனக்குத் தெரியும். அரசனை நம்பி புருஷனைக் கைவிட்டதைப்போல் உலக யுத்தத்தை நம்பி, வீட்டு யுத்தத்தைக் கைவிட்டு விடுவீர்கள் என்பது எனக்குத் தெரியும்.

அத்தனை நம்பிக்கையாகத் தினம் பத்திரிகையைப் படித்தீர்களே, இப்பொழுது அந்த யுத்தமா உங்கள் உதவிக்கு வரப்போகிறது? எவனாவது உலக யுத்தத்தை நம்பி வீட்டு யுத்தத்தை மறப்பானா?

உலக யுத்தம் இன்று வரும். நாளைக்குப் போய்விடும். அதைப்போல நம்பிக்கைத் துரோகம் பண்ணும் வஸ்து வேறு ஒன்றும் கிடையாது.

ஆனால் வீட்டு யுத்தமோ அப்படியல்ல. நம்முடைய ஆத்மாவைப் போல் அது சாசுவதமானது. தணல் அதை எரிக்காது; தண்ணீர் அதை நனைக்காது; வாயு உலர்த்தாது; அதற்குப் பிறப்பும் கிடையாது, இறப்பும் கிடையாது!

இவ்வளவு நல்ல விஷயத்தை இவ்வளவு சீக்கிரம் மறந்து விட்டீர்களே? பரவாயில்லை. கவலைப் படாதீர்கள். அதன் தத்துவங்களை இதோ ஒரு நொடியில் விளக்கி விடுகிறேன்.

நீங்கள் உம் மனைவியுடன் போர் தொடுக்கும் முன்னர் போர்க்களம் எது என்பதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரே விதப் போர்க்களமே எல்லாருக்கும் நல்லது என்று சொல்ல முடியாது. சில வீடுகளில் சமையல் அறையைப் போன்ற உத்தமமான போர்க்களம் வேறு கிடையாது. வேறு சில வீடுகளிலோ அதைப் போன்ற மோசமான போர்க்களம் வேறு இருக்க முடியாது.

புருஷன் மனைவி யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் வேறு யாராவது மூன்றாவது மனுஷர் யுத்தத்தில் குறுக்கிட்டு, மனைவி கட்சியில் சேர்ந்துகொண்டு உங்களைத் தோற்கடிக்காமல் பார்த்துக் கொள்வதற்காகத்தான் சரியான போர்க்களமாகப் பொறுக்கி எடுக்க வேண்டும் என்று சொன்னேன்.

சில வீடுகளில் சமையல் அறை பின்னால் தள்ளி இருக்கும். நாம் சற்று உரத்துப் பேசினாலும் வேறு யாருக்கும் காது கேட்காது. சில வீடுகளிலோ கூடம்தான் பின் தள்ளி இருக்கும். அப்பொழுது கூடத்தைத்தான் நாம் போர்க்களமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

போர்க்களத்துக்கு அடுத்தபடியாக நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் காரணம். உலக யுத்தத்தில் ஈடுபட்டவர்கள் அகாரணமாகத்தான் யுத்தத்தில் கலந்து

கொள்கிறார்கள் என்றாலும், போலிக் காரணமாவது ஒன்று கூறிக்கொண்டு சண்டைக்குப் போவதுதான் நாகரிகம் என்று கருதப்படுகிறது.

"நம் சொந்த மனைவியுடன், நாம் தாலிகட்டிய மனைவியுடன், நம் இஷ்டப்படி சண்டை போடுவதற்குக்கூட நமக்குச் சுதந்திரம் கிடையாதா, அதற்குக்கூட ஒரு காரணம் கண்டு பிடித்தாகவேண்டுமா ?" என்று கேட்கிறீர்களா ?

நீங்கள் கேட்பது நியாயந்தான். ஆனால் நான்தான் சொன்னேனே. ஒரு போலிக் காரணமாவது வைத்துக் கொண்டு சண்டைக்கு இழுப்பதுதான் நாகரிகம் என்று.

அதோடு, போலிக் காரணம் கண்டுபிடிப்பது சிரமம் என்று நினைத்துக்கொண்டுதான் நீங்கள் இப்படி யெல்லாம் கேட்கிறீர்கள் என்று நினைக்கிறேன்.

உண்மையில் அதைப்போலச் சுலபமான காரியம் வேறு கிடையாது.

உலக யுத்தக்காரர்களாவது, மைனாரிட்டி பிரச்னையைக் கிளப்பலாமா, "காரிடார்" ஒன்று கேட்கலாமா, இல்லை ஜனநாயகத்தின் பேரில் பழியைப் போட்டுவிட்டு, ஊரான் யுத்தத்தில் குதிக்கலாமா என்றெல்லாம் யோசிக்க வேண்டி யிருக்கிறது.

ஆனால் வீட்டு யுத்த விஷயத்திலோ இந்தத் தொல்லை யெல்லாம் கிடையாது. நம் சண்டைக்கு என்றே பகவான் ஏற்படுத்தியதுபோல் ஸ்திரீகள் சமைப்பது என்றும், அவர்கள் சமைத்ததைப் புருஷர்கள் சாப்பிடுவது என்றும் ஏற்படுத்தி யிருக்கிறார்.

ஆகவே தினம் குறைந்த பட்சம் நான்கு தடவையாவது நீங்கள் உங்கள் மனைவியுடன் சண்டைபோட நல்ல தருணம் கிடைக்கிறது.

காலைக் காப்பியைக் கண்டதும், அது ஏன் நன்றா யில்லை என்று ஒரு யுத்தத்தை ஆரம்பித்து வைக்கலாம். காலைச் சாப்பாட்டின் போதும், சமையல் நன்றாயில்லை

என்று ஒரு யுத்தத்தை ஆரம்பித்து வைக்கலாம். அதே மாதிரி சாயந்திரக் காப்பி இருக்கிறது; ராத்திரிச் சாப்பாடு இருக்கிறது.

இந்த நான்கு தருணங்களை விட வீட்டு யுத்தத்தை ஆரம்பித்து வைப்பதற்கு வேறு நல்ல தருணமும் கிடைக்காது, யுத்தத்துக்கு வேறு நல்ல காரணமும் கிடைக்காது.

சரி, யுத்தத்தை ஆரம்பித்தாயிற்று, அதைத் தொடர்ந்து நடத்திவைப்பது எப்படி என்று கேட்கிறீர்களோ? என்னய்யா! இந்த ஆறு வருஷ காலத்துக்குள் ரொம்ப விஷயங்களை மறந்து விட்டீர்களே?

முன்னெல்லாம் வந்த சண்டையை விடாமல் நடத்திக் கொண்டு போவீர்களே, நானே கவனித்திருக்கிறேனே? வேறு ஒரு காரணம் அகப்படா விட்டாலும் பதினைந்து வருஷங்களுக்கு முன், உங்கள் மாமனார் செய்த சீர் வரிசைகளின் அழகைப்பற்றி வர்ணிக்க ஆரம்பிப்பீர்களே!

........ஆ! இப்பொழுது ஞாபகம் வருகிறதா? சண்டையைத் தொடர்ந்து நடத்துவதற்கு இது ஒன்றே போதும்! இது ஒன்றை வைத்துக்கொண்டே வருஷக் கணக்கில் சண்டை நடத்தலாமே!

இல்லை, மனைவியின் ஊதாரித்தனம் இருக்கவே இருக்கிறது. உண்மையில் ஸ்திரீகளை விட புருஷர்களாகிய நாம்தான் ஊதாரிகள் என்றாலும், அவர்கள்மீதுதான் நாம் எல்லாரும் பழியைச் சுமத்தி யிருக்கிறோம். ஆகவே இதையே விடாமல் பிடித்துக்கொண்டு சண்டையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு போகலாம்.

சண்டையின்போது வெடிகுண்டுகள் சப்தம் கேட்க வேண்டுமல்லவா? அதற்கு நீங்கள் நாற்காலிகளைப் போட்டு உடைக்கலாம், புஸ்தகங்களைத் தூக்கி எறியலாம். (கையில் இருக்கும் புஸ்தகம் இரவல் புஸ்தகம்தானா, அல்லது லைப்ரரி புஸ்தகம்தானா என்று கவனித்துக் கொண்டு தூக்கி எறியுங்கள். சொந்தப் புஸ்தகத்தைத் தூக்கி எறிந்து கிழித்து விடாதீர்கள்.)

நீங்கள் நாற்காலியைப் போட்டு உடைக்கும் போதெல்லாம் உங்கள் மனைவியும் பாத்திரங்களைப் போட்டு உடைப்பாள். "ஐயோ! பாத்திரங்கள் வீணுக உடைகின்றனவே" என்று கவலைப் படாதீர்கள். யுத்தம் என்ருல் யுத்தச் செலவு இல்லாமலா இருக்கும்? நாற்காலி ரிப்பேரையும், பாத்திர ரிப்பேரையும் யுத்தச் செலவுக் கணக்கில் எழுதினுல் போச்சு!

கடைசியாக ஒரு விஷயம். அதுவும் அந்தப் பாழும் பகவான் பண்ணினதுதான். எப்படி உலக யுத்தத்தில் அடாமிக் குண்டைத் தூக்கிக் கொண்டுபோய் அமெரிக்கர்கள் கையில் கொடுத்தாரோ அதேமாதிரி வீட்டு யுத்தத்திலும் அடாமிக் குண்டைத் தூக்கிக் கொண்டுபோய் ஸ்திரீகள் கையில் கொடுத்துவிட்டார். ஸ்திரீகள் தங்கள் அடாமிக் குண்டான "கண்ணீர் குண்டை" உபயோகிக்கத் தொடங்கினுர்களோ, உங்கள் பாடு ஆபத்துத்தான். சரணுகதி அடையவேண்டியது நீங்கள்தான். எனவே அதற்குள் யுத்தத்தை முடித்துக் கொண்டு விடுங்கள்.

....என்ன! என்ன சொல்கிறீர்கள்? இப்பொழுது பழைய ஞாபகம் வந்துவிட்டது, யுத்தத்துக்குத் தயார்தான் என்கிறீர்களோ?........அதோ, உங்கள் மனைவியே கையில் காப்பி எடுத்துக் கொண்டு வருகிருப் போலிருக்கிறதே! காப்பி நன்ருயில்லை என்று சண்டையை ஆரம்பித்து வையுங்களேன்!

....நீங்கள் என்ன அம்மா கேட்கிறீர்கள்? புருஷனுடன் யுத்தம் தொடுப்பதற்கு என்ன காரணம் கண்டு பிடிக்கலாம் என்ரு கேட்கிறீர்கள்? என்ன அம்மா, தமாஷ் பண்ணுகிறீர்களா, என்ன? ஸ்திரீகளுக்குத் தெரியாத காரணமா எனக்குத் தெரியப் போகிறது? இல்லை, ஸ்திரீகள் புருஷர்களுடன் சண்டை இடுவதற்குக் காரணம் தான் வேண்டுமா, என்ன?

திருவள்ளுவர் மனைவி வாசுகி அம்மையாரை நினைக்கும்போதெல்லாம் எனக்கு வாய்த்திருக்கும் அம்மையாரைப் பற்றிய நினைவு எனக்கு வராமல் இருப்பதில்லை. மனைவி எப்படி இருக்க வேண்டும் என்று திருவள்ளுவர் கருதினர் என்பதை அவருடைய பின்வரும் குறளிலிருந்து நாம் புரிந்து கொள்ளலாம்.

தெய்வம் தொழாள், கொழுநன் தொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.

அதாவது மனைவி தெய்வத்தைக் கூடத் தொழவேண்டிய அவசியமில்லை. ஆனல் புருஷனையே தெய்வமென்று மதித்துக்கொண்டாட வேண்டும் என்பது திருவள்ளுவரின் கருத்து. இப்படிப்பட்ட மனைவிகள் பெய் என்ருல் உடனே மழை பெய்யும் என்பதும் அவர் அபிப்பிராயம்.

ஸ்திரீகள் எல்லாரும் பதி சொல் தவருத பாவைகளாக விளங்க வேண்டும் என்பது திருவள்ளுவர் அபிப்பிராயம் மாத்திரமல்ல, அவருக்கு முன்னர் இருந்தே வெகுகாலமாக நம் நாட்டில் இருந்து வரும் அபிப்பிராயமுமாகும்.

பழைய காலத்தில் இத்தகைய மனைவிமார்கள் இருந்திருக்கிருர்களா என்பதைப் பற்றிய சந்தேகமே யாருக்கும் வேண்டாம். பழைய காலத்தில் மாதம் மும்மாரி பெய்து கொண்டிருந்தது என்று சொல்லுகிருர்கள். அல்லவா? அதற்குக் காரணமே இந்தப் பதி சொல் தவருத பாவைகளாகத்தான் இருக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். இவர்கள் எல்லாரும் மாதத்துக்கு மூன்று தடவை மகாநாடுகூட்டி, "மழையே, பெய்" என்று சொல்லியிருக்க வேண்டும். மழையும், இத்தனை ஸ்திரீகள் சேர்ந்து சொல்லும்போது நாம் பெய்யாமல் இருந்தால் என்ன ஆபத்து நேரிடுமோ என்று பயந்து பெய்திருக்க வேண்டும்.

ஆனல் என்ன காரணமோ தெரியவில்லை, நம் மனைவிமார்கள் எல்லாம் பழைய காலத்து ஸ்திரீகளைப் போல் பதி சொல் தவருத பாவைகளாக விளங்கக் காணேம். இவர்

களுக்கு முன்னர் நமக்குத் தெரிந்து இருந்த ஸ்திரீகளும் அப்படி இருந்ததாகத் தெரியவில்லை.

ஒரு காலத்தில் பதி சொல் தவறாத பாவைகளாக விளங்கிய நம் நாட்டு ஸ்திரீகள் எப்பொழுது முதற்கொண்டு அந்த வழக்கத்தை கைவிட்டார்கள் என்று தெரியவில்லை. இது விஷயத்தை யாரும் ஆராய்ச்சி செய்திருப்பதாகவும் தெரியவில்லை.

ஆனால் இது விஷயத்தைப் பற்றி நான் சற்று மூளையைச் செலுத்திப் பின்வரும் முடிவுக்கு வந்திருக்கிறேன்.

ஏதோ ஒரு சமயம் இந்தப் பதி சொல் தவறாத பாவைகளால் வருண பகவானுக்குப் பிரமாதமாகத் திண்டாட்டம் ஏற்பட்டிருக்க வேண்டும். எல்லாப் பெண்டிரும் தாங்கள் பதி சொல் தவறாத பாவைகள் தான் என்று நிரூபிப்பதற்காக நினைத்த போதெல்லாம் வருண பகவானை ஏவியிருக்கவேண்டும். வருணபகவானும் ஓய்ச்சல் ஒழிவில்லாமல் மழை பொழிந்து கொண்டே இருந்திருக்க வேண்டும்.

பின்பு ஒரு நாள் வருணபகவான் இந்தத் தொல்லை பொறுக்காமல் க்ஷீராப்திசயனன மகாவிஷ்ணுவின் தயவை நாடிப் போயிருக்க வேண்டும். ஸ்ரீமந் நாராயணன் வருண பகவான் மீது கருணை கூர்ந்து, பதி சொல் தவறாத பாவைகள் இருப்பதால் தானே இத்தனை தகராறு ஏற்படுகிறது, பதி சொல் தவறாத பாவைகளே இல்லாமல் போக வேண்டும் என்று சாபம் கொடுத்திருக்க வேண்டும்.

இதைக் கண்ட பதி சொல் தவறாத பாவைகள் ஸ்ரீ மகாவிஷ்ணுவிடம் அப்பீல் செய்து கொண்டிருக்க வேண்டும். ஸ்ரீமகாவிஷ்ணு அவர்கள் மீது இரங்கி, "இனி நீங்கள் நினைத்த போது விண்மாரியைப் பெய் என்றால் பெய்யாது. அதற்குப் பதில் நான் இன்னொரு வரம் தருகிறேன். நினைத்த மாத்திரத்தில் நீங்கள் கண்மாரியை வரவழைக்க முடியும்" என்று வரம் கொடுத்திருக்க வேண்டும்.

அந்த வரத்தின் பயனாகத்தான் இன்று பதி சொல் தவறாத பாவைகளை மருந்துக்குக் கூட காண முடியவில்லை என்பது என் துணிபு. நினைத்த மாத்திரத்தில் ஸ்திரீகள் தங்கள் கண்களில் ஜலத்தை வரவழைத்துக் கொள்ள முடிவதற்கும், நாம் என்ன முயன்றாலும் அழ முடியாமல் அழுமாட்டாக் குறையாய்த் தவிப்பதற்கும் இது தான் காரணமாக இருக்க வேண்டும் என்பதும் என் எண்ணம்.

ஆனால் எது எப்படியானாலும் ஸ்திரீகள் பதி சொல் தவறாத பாவைகளாக விளங்க வேண்டும் என்ற ஆசை மாத்திரம் புருஷர்களாகிய நமக்கு இன்னும் மறையவில்லை. எல்லாரும் வாசுகி அம்மையாரைப் போல் கிணற்றிலிருந்து பாதி ஜலம் இழுத்துக் கொண்டிருக் கையிலேயே அந்த ரத்தில் குடத்தை விட்டு விட்டு வரவேண்டும் என்று நான் சொல்லவில்லை. வாசுகி அம்மையார் காலத்தில் பூமியின் ஆகர்ஷண சக்திக்கு உட்படாமல் அந்தரத்தில் நின்ற குடம் இன்றும் அப்படியே நிற்கும் என்ற நிச்சயமில்லை. இன்னும் தற்காலத்தில் குடவிலை முன்னைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக இருக்கிறது. இன்னும் வாசுகி அம்மை யார் உபயோகித்த குடம் மண்குடமாக இருந்திருக்க வேண் டும். அது தான் அத்தனை தைரியமாக ஒரு குடம் போனால் இன்னொரு குடம் வாங்கிக் கொள்ளலாம் என்ற தைரியத்தில் அதை அவர் அந்தரத்தில் விட்டுவிட்டு வந்திருக்க வேண்டும். ஆனால் தற்காலத்திய பித்தளைக் குடத்தை அத்தனை தைரிய மாகப் போனால் போகட்டும் என்று விட்டு விட்டு வர முடியுமா ?

ஆகவே, நான் தற்கால ஸ்திரீகள் வாசுகி அம்மை யாரைப்போல் அந்தரத்தில் குடத்தை விட்டு விட்டு வர வேண்டும் என்று சொல்ல வில்லை. ஆனால் மற்றப்படி நாம் கூப்பிட்ட குரலுக்கு உடனே 'ஏன்' என்று ஓடிவந்து பதில் சொல்வதோ, அல்லது மற்றப்படி நாம் சொன்னபடி யெல்லாம் கேட்பதோ கிடையாதே என்று தான் வருத்த மாக இருக்கிறது.

உதாரணமாக, நாம் சாயந்திர வேளையில் காரியாலயத்திலிருந்து வெகு களைப்புடன் வீடு திரும்புகிறோம். உள்ளே நுழைந்ததும், நுழையாததுமாக மனைவியைத்தான் கூப்பிட்டுக்கொண்டு நுழைகிறோம். பெயர் சொல்லிக் கூப்பிடுவதோ, அல்லது அடி என்று அழைப்பதோ, அல்லது குழந்தைகளின் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதோ, நமக்கு எப்படி வழக்கமோ, அந்த வழக்கத்தின் படிதான் கூப்பிட்டுக்கொண்டு உள்ளே நுழைகிறோம். ஆனால் சமையல் அறையில் இருக்கும் மனைவி உடனேயே நமக்குக் காட்சி அளிக்கிறாளா, கிடையாது. அப்பொழுது தான் வெகு மும்மரமாகச் சமையல் வேலையைப் பார்க்க ஆரம்பிப்பாள். அல்லது காப்பிக்கொட்டையை அறைக்க ஆரம்பிப்பாள். நாம் கூப்பிட்டுக்கொண்டே இருக்க வேண்டியதுதான். "இதோ வந்து விட்டேன், இதோ வந்து விட்டேன்" என்று குரல் வந்து கொண்டேயிருக்கும். ஆனால் ஆள் எதிரில் வரமாட்டாள்.

கூப்பிட்ட குரலுக்குத்தான் இத்தனை மரியாதை என்றால், நாம் சொல்லும் காரியங்களுக்கும் இந்த மரியாதைதான். உதாரணமாக பிறந்த வீட்டுப் பெருமையை நம் எதிரில் பேசவேண்டாம் என்று நாம் எவ்வளவு சொன்னாலும் எந்த மனைவிதான் கேட்கிறாள்?

நானும் பார்க்கிறேன், மனம் ஒத்துப்போன மாமனாரையும், மாப்பிள்ளையையும் நான் இன்னும் பார்த்ததில்லை. ஏதாவது ஒரு காரணத்தினால் மாப்பிள்ளை மாமனார் மீது கோபித்துக்கொண்டு தான் இருக்க வேண்டியிருக்கிறது. வேறு ஒரு காரணத்திற்காக இல்லாவிடினும் மாப்பிள்ளை என்று காட்டிக் கொள்வதற்காகவாவது நாம் மாமனார் மீது கோபித்துக்கொண்டு இருக்க வேண்டித்தான் இருக்கிறது. இது தெரியாமல் மனைவி நம் வார்த்தையை மீறி தன் பிறந்த வீட்டுப் பெருமையை நம் எதிரில் அளந்து கொண்டிருந்தால் நமக்குக் கோபம் வருமா, வராதா?

ஆக, இத்தகைய காரியங்களைப் பார்க்கும் போது, புருஷர்களாகிய நம்மில் யாருக்குத்தான் நம் மனைவி பதி சொல் தவருத பாவையாக இருக்கக்கூடாதா என்று தோன்ருது ?

கல்யாணமான புதிதில் என் மனைவி மாத்திரம் தான் பதி சொல் தவருத பாவை இல்லை, மற்ற எல்லார் மனைவிகளும் பதி சொல் தவருத பாவைகள் என்று நான் எண்ணிக்கொண்டு வந்தேன். நமக்கு மனைவியாக வாய்க்கப் போகிறவள் பதி சொல் தவருத பாவைதாஞ என்று கவனிக்காமல்,பிதுர்வாக்கிய பரிபாலனமும், மாதுர் வாக்கிய பரிபாலனமும் பண்ணுவதற்காக இந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டோமே என்று கூட வருத்தப்பட்டேன். மற்ற பெண்களின் பெற்ருேர்களை விட இந்தப் பெண்ணின் பெற்ருேர்கள் தான் அதிக வரதட்சணை கொடுக்க முன் வந்துள்ளார்கள், ஆகவே நீ இந்தப் பெண்ணைத்தான் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று என் தாயாரும், தகப்பஞரும் கட்டளையிடும் போது, அக்கட்டளையை எப்படி மறுப்பது என்று நான் கல்யாணம் பண்ணிக் கொண்டேன்.

ஆஞர் பின்னர் கல்யாணமான நண்பர்களுடன் என் அனுபவத்தை பறிமாறிக் கொண்ட பின்னர்தான் ஒரு ஸ்திரீயும் பதி சொல் தவருத பாவை இல்லை எனத் தெரிந்து கொண்டேன்.

நம் மனைவி பதி சொல் தவருத பாவையாக இருக்கக கூடாதா என்று நான் ஏங்கிக் கொண்டிருந்ததை என் மனைவி சரசு திடீரென்று கண்டு கொண்டாள். “பூ! இதற்குத்தாஞ இப்படி உருகி இளைத்துப் போகிறீர்கள்? இன்றையிலிருந்து நீங்கள் சொன்னபடி யெல்லாம் கேட்கிறேன். பாருங்கள்” என்ருள்.

“நீ எல்லா விஷயத்திலும் கூட என் சொன்னபடி கேட்கவேண்டும் என்று அவசியமில்லை. இரண்டே

இரண்டு விஷயத்தில் மாத்திரம் பதி சொல் தவருத பாவையாக இருந்தால் போதும்" என்றேன்.

"எந்த இரண்டு விஷயம்" என்று கேட்டாள்.

"ஒன்று நான் கூப்பிட்டவுடனேயே ஏன் என்று கேட்டுக்கொண்டு ஓடிவந்து விடவேண்டும். இரண்டு, இந்த வீட்டு வம்பை அடுத்த வீட்டுக்கும், அடுத்த வீட்டு வம்பை இந்த வீட்டுக்கும் பறிமாறக் கூடாது. என்ன சரி தானே!" என்றேன்.

"ரொம்ப சரி" என்ருள்.

வெகு ஆனந்தத்துடன் நான் அன்று ஆபீஸ் கிளம்பினேன். எனக்கு இருந்த ஆனந்தத்தில் மௌன்ட் ரோட்டில் பஸ்ஸைவிட்டு விட்டு இறங்க வேண்டியவன் பாரிஸ் கார்னரில் தான் போய் இறங்கினேன்.

மாலையில் வீடு திரும்பியதும் 'சரசு' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தேன். நான் கூப்பிட்டதும், கூப்பிடாததுமாக "ஏன்" என்று கேட்டுக்கொண்டே சரசு ஓடி வந்து எதிரில் நின்ருள். என்னல் சந்தோஷம் தாங்க முடியவில்லை. நிஜமாகவே நம்ம சரசுதான இப்படித் திடீரென்று பதி சொல் தவருத பாவையாக மாறி விட்டாள் என்று ஆச்சரியப்பட்டேன். சரசு கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு உள்ளே சென்றதும், திரும்பவும் அவளை[illegible] பரிசோதிப்பதற்காக சரசு என்று [illegible] [illegible]வும் ஏன் என்று கேட்டுக்கொண்டே [illegible] [illegible]நின்ருள்.

[illegible] உட்காரும் முன் சரசுவை ஒரு [illegible]. இதோ, இதோ என்று [illegible]ாள்.

[illegible] சாப்பிட உட்காரப் [illegible]ன்ருள். "எனக்குப் [illegible]போடு" என்று

சர்சு வெண்கலப் பானையிலிருந்த ஏதோ வெளுப்பான ஒன்றைக் கலத்தில் போட்டாள். அது அரிசியா, சாதமா, வெந்ததா, வேகாததா என்று கண்டு பிடிக்க முடியவில்லை. அதை என்ன பெயர் சொல்லி அழைப்பது என்றும் தெரிய வில்லை. ஒரு பக்கம் அரிசி, ஒரு பக்கம் சாதம், ஒரு பக்கம் வெந்தது, ஒரு பக்கம் வேகாதது என்று இருந்தால் அதற்கு என்ன பெயர்சொல்லி அழைப்பது?

"ஏன், இப்படி!" என்று கோபத்துடன் கேட்டேன். "நான் என்ன பண்ணுவேன், நீங்கள் கூப்பிட்ட குரலுக் கெல்லாம் ஏன் என்று கேட்டுக்கொண்டே ஓடிவந்து கொண்டிருந்தேன். சாதம் இப்படி ஆகிவிட்டது" என்றாள். "சரி, பழையது இருந்தாலும் பரவாயில்லை. அதைப் போட்டு மோரை ஊற்று." என்றேன்.

பழையது இருந்தது. ஆனால் மோர் இல்லை. மோரை மூடப்போன சமயம் நான் சரசுவைக் கூப்பிட்டதால் பூனை வந்து மோரைக் குடித்து விட்டுப் போய் விட்டது

"சரி, சாதமே வேண்டாம், பாலாவது ஒரு டம்ளர் கொடுத்துத் தொலை."

பால் கெட்டுப் போய்விட்டது. பாலைக் காய்ச்சுவதற் காகக் குமுட்டியில் வைக்கப்போன ஒவ்வொரு சமயமும் நான் கூப்பிட்டுக் கொண்டே யிருந்ததால் பால் கெட்டுப் போய் விட்டது.

இந்த நிலைமையைக் குறித்து [illegible]படுவதா, அல் லது ஆனந்தப்படுவதா என்று எ[illegible]
சாப்பாட்டு வாயில் மண் விழுந்து [illegible]
ரப்படுவதா, அல்லது நம் மனைவி[illegible]
யாக மாறிவிட்டாளே எ[illegible]
தெரிய வில்லை. இத[illegible]
வாசுகி அம்மையாரை[illegible]

ஆமாம், திருவ[illegible]
வது சமையல் [illegible]
சமையல் அத[illegible]

குடித்து விட்டுப் போனதுண்டா? பால் காய்ச்சப் படாமல் கெட்டுப் போனதுண்டா? இப்படி என் மனம் என்னென்னமோ சிந்திக்கத் தொடங்கிற்று, இல்லை, ஒரு வேளை திருவள்ளுவர் தம் மனைவியை, அவள் கிணற்றடியில் இருக்கும் போது மட்டும் கூப்பிடுவது, மற்ற சமயங்களில் கூப்பிடாமல் இருப்பது என்று வைத்துக் கொண்டிருந்தாரோ?

இப்படி என் மனம் என்னென்னமோ அலைபாய்ந்தது. கடைசியில் பசி வந்திடப் பத்தும் பறந்து போம் என்று சொல்வார்களே, அதையொட்டி, வேளா வேளைக்குச் சரியானபடி சாப்பாடு கிடைத்தால் போதும், மனைவி பதி சொல் தவருத பாவையாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை என்று தீர்மானித்து விடலாமா என்று ஒரு கணம் நினைத்தேன்.

ஆனல் முன் வைத்த காலை பின் வைக்காதே என்று என் மனது சொல்லவே பட்டினிகிடந்தாலும் பரவாயில்லை, மனைவி பதி சொல் தவருத பாவையாக இருக்க வேண்டியது தான் மிகவும் அவசியம் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

அன்றிலிருந்து நான் மனைவியைக் கூப்பிடுவதற்கு முன்னர் சமையல் அறைக்கு ஒரு நடை போய் நிலைமை எப்படி இருக்கிறது என்று ஒரு கண்ணேட்டம் பார்த்து விட்டு வருவேன். நாம் இப்பொழுது கூப்பிட்டால் சாப்பாடு கெடுமா, கெடாதா என்று ஆராய்ந்து பார்த்து விட்டுத் தான் கூப்பிடுவேன்.

ஆனல் இதற்காக நான் யோசனை பண்ணித்தான் கூப்பிடுகிறேன் என்று அவள் தெரிந்து கொள்ள விடலாமா? அதற்காக சமையல் அறைக்குள் ஒரு காரணமுமின்றி நுழைந்தது போல் நுழைந்துவிட்டு, கூடத்திற்கு வந்த பிறகு கூப்பிடுவேன்.

நான் இத்தனை ஜாக்கிரதையாக நடந்து கொண்டும், எத்தனையோ சமயங்களில் விபரீதம் நிகழ்ந்து விட்டது. நான் வேவு பார்த்துவிட்டு, கூடத்துக்குத் திரும்புவதற்குள்

சரசு அடுப்பில் ஏதாவது வைத்திருப்பாள். நான் கூப் பிட்டால் அது நான் சாப்பிடும் சாப்பாட்டுக்குக் குந்தக மாக வந்து முடியும்.

அதற்காக சரசு சமையல் அறையில் இருந்தால் கூப் பிடுவதில்லை, மற்ற வேறு எங்கேயாவது இருந்தால் கூப் பிடுவது என்று வைத்துக் கொண்டேன். இதனால் சரசுவை நாளைக்கு இரண்டு, இரண்டு மூன்று தடவைக்கு மேல் கூப்பிட முடியவில்லை. அவள் தான் எப்பொழுது பார்த் தாலும் சமையல் அறைக்குள்ளேயே இருக்கிறளே!

இப்படி சில நாட்கள் சென்றன. திடீரென்று ஒரு நாள் காலை பொழுது விடிந்ததும் விடியாததுமாக பக்கத்து வீட்டில் பரபரப்பு காணப்பட்டது. வாசலில் லாரிகள் வந்து நின்றன. வீட்டில் உள்ள சாமான்கள் லாரியில் கொண்டு வந்து வைக்கப்பட்டன.

அதைப் பார்த்தும் பக்கத்து வீட்டுக்காரர் வீட்டைக் காலி பண்ணுகிறர் என்று தெரிந்து கொண்டேன். ரொம்ப நாளாகவே பக்கத்து வீட்டின் மீது எனக்கு ஒரு கண். அந்த வீடு காலியானல் கட்டாயம் அதைப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்று வெகு நாளாகவே திட்டம் போட்டிருந்தேன்.

ஆகவே பக்கத்து வீட்டை நோக்கி ஓடினேன். பக்கத்து வீட்டுக்காரனைப் பார்த்து, "என்ன ஸார்! நீங்கள் காலி பண்ணப் போகிறீர்களா? எனக்குத் தெரியாமல் போய் விட்டதே? இந்த வீட்டை வேறு யாராவது பேசி விட்டார்களா, இல்லை, எனக்குக் கிடைக்குமா" என்று கேட்டேன்.

"நான் காலி பண்ணப் போகிறேன் என்று தெரிந் ததுமே வேறு யாரோ பேசி விட்டார்களே ஸார்! ஏன் நாங்கள் காலி பண்ணப் போகிறேம் என்கிற விஷயம் உங்கள் மனைவிக்கு பத்து நாளைக்கு முன்னரே தெரியுமே!" என்று அவர் பதில் அளித்தார்.

என்ன, பத்து நாளைக்கு முன்னரே தெரிந்த இந்த விஷயத்தை சரசு நம்மிடம் சொல்லாமல் விட்டதால் அல்லவா பக்கத்து வீடு நமக்குக் கிடைக்காமல் போய் விட்டது என்று எனக்கு சரசுவின் மீது ஆத்திரம் ஆத்திர மாக வந்தது.

உடனேயே வீட்டை நோக்கி ஓடி "சரசு" என்று கூப்பிட்டேன். சரசு பறந்து கொண்டு ஓடிவந்தாள். "ஏன் பக்கத்து வீட்டுக்காரர்கள் காலி பண்ணப் போகிறார்கள் என்று எனக்கு நீ சொல்ல வில்லை?" என்று கேட்டேன்.

"நீங்கள் தான் இந்த வீட்டு வம்பை அடுத்த வீட்டிலும் அடுத்த வீட்டு வம்பை இந்த வீட்டிலும் பரிமாறக் கூடாது என்று சொல்லியிருக்கிறீர்களே!" என்றாள்.

இதற்கு என்ன பதில் சொல்லுவது என்று எனக்குத் தெரியவில்லை. சுற்று முற்றும் பார்த்தேன். ஒருவரும் எங்களைக் கவனிக்கவில்லை என்று தெரியவே கன்னத்தில் போட்டுக் கொண்டேன். "நீ வழக்கம் போலவே இரு. இந்த பத்து நாளாகப் பதி சொல் தவறாத பாவையாக இருந்தது போதும்" என்றேன்.

எந்தக் காரியமும் அளவுக்கு மிஞ்சிப்போனால் கெடுதலாகத்தான் முடிகிறது. ஒரு விதத்தில் பார்த்தால் மனைவி பதிசொல் தவறாத பாவையாக இருப்பதும் கெடுதல்தான் என்று தோன்றுகிறது. நாம் சொன்னபடி யெல்லாம் மனைவி ஆடிக்கொண்டிருப்பது நமக்கு ஒரு நாள், இரண்டு நாள் வேண்டுமானால் சந்தோஷம் கொடுக்கலாம். ஆனால் பின்னால் அது அலுத்துப் போய்விடும் என்பதில் சந்தேகமில்லை. நாம் ஒன்று சொல்ல, மனைவி எதிர்த்து ஒன்று சொல்ல, அதற்கு நாம் ஒன்று எதிர்த்துச் சொல்ல, இப்படி வாக்கு வாதம் வளர்ந்து கொண்டு போனால் தான் வாழ்க்கை சுவாரஸ்யமாய் இருக்கும்.

காரியதரிசிகளைப் பற்றிப் பேச ஆரம்பிக்கும் முன்னர் நான் கொஞ்ச காலத்திற்கு முன்னால் என் கண்ணால் கண்ட வேடிக்கைக் கதை ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன்.

ஒரு சமயம் என் நண்பர் ஒருவருக்கு உடம்பு சரியாக இல்லை. அந்த ஊரில் உள்ள ஒரு பெரிய டாக்டரை வரவழைத்தால் தான் உடம்பு குணமாகும் என்று எல்லாரும் சொன்னார்கள். வீட்டிலே போன் இருந்ததால் உடனே போனிலே டாக்டரைக் கூப்பிட்டோம்.

டாக்டர் பெரிய டாக்டர். ஆகவே அவர் போனை எடுக்கவில்லை. அவருக்குப் பதில் அவர் கம்பௌண்டர் தான் போனை எடுத்தார். "நான் தான் டாக்டரின் கம்பௌண்டர் பேசுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு நண்பர், "டாக்டரை உடனே இங்கு வரச் சொல்லவேண்டும். எனக்கு உடம்பு சரியாய் இல்லை" என்று சொன்னார். அதற்குக் கம்பௌண்டர், "தயவு செய்து மன்னிக்க வேண்டும், டாக்டருக்கு வேலை மிகவும் அதிகமாக இருக்கிறது. வேறு டாக்டர் யாரையாவது அழைத்துக் கொள்ளுங்கள்" என்றார்.

"இல்லை ஸார்! இந்த டாக்டர்தான் ஸார் வரவேண்டும். தயவு செய்து கொஞ்சம் வரச்சொல்லுங்கள் ஸார். என்ன பீஸானாலும் கொடுத்து விடுகிறேன் ஸார். அவர் பார்த்தால் தான் உடம்பு குணமாகும் போல் தோன்றுகிறது ஸார்" என்று என் நண்பர் எவ்வளவோ கெஞ்சிப் பார்த்தார். ஆனால் அந்த முரட்டுக் கம்பௌண்டர் கேட்பதாயில்லை. அதெல்லாம் முடியாது ஸார். இந்த டாக்டர் கண்டிப்பாக வரமுடியாது. வேறு டாக்டர் யாரையாவது அழைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லிவிட்டு முகத்தில் அறைந்தாற் போல் "டக்" கென்று ரிஸீவரைக் கீழே வைத்து விட்டார்.

என் நண்பருக்கோ முகம் அப்படியே வாடிவிட்டது. டாக்டர் வரமாட்டேன் என்று சொல்லிவிட்டாரே என்று

ஒரே ஏக்கம். என்ன பண்ணுவது என்று தெரியாமல் தவித்தார். அப்பொழுது சடாரென்று எனக்கு ஒரு நல்ல யோசனை தோன்றியது. நடுவில், நடுவில் எனக்கு நல்ல யோசனைகளும் தோன்றுவது உண்டு.

"ஏன் வீணுகக் கவலைப்படுகிறீர்கள்? இதோ அந்த டாக்டரை நான் வரவழைக்கிறேன். இன்னும் பத்து நிமிஷத்தில் அந்த டாக்டரை இங்கு நான் வரவழைக்கா விடில் என் பெயரை மாற்றிக் கூப்பிடுங்கள்" என்றேன்.

"உங்கள் பெயரை நான் என்ன ஸார் மாற்றுகிறது? நீங்களே தான் மாற்றி நாடோடி என்று வைத்துக் கொண்டிருக்கிறீர்களே!" என்ருர் நண்பர் வேடிக்கையாக.

"தமாஷெல்லாம் அப்புறம் வைத்துக் கொள்ளலாம். இதோ டாக்டரை வரவழைக்கிறேன் பாரும்" என்று சொல்லி போனை எடுத்தேன். டாக்டர் வீட்டு நம்பரைப் போட்டேன். "நான் தான் டாக்டரின் கம்பௌண்டர் பேசுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டும்" என்று கம்பௌண்டர் கேட்டார்.

அதற்கு நான், என் நண்பரின் பெயரைச்சொல்லி, "நான் இன்னரின் காரியதரிசி பேசுகிறேன். டாக்டர் வீட்டில் இருக்கிருரா?" என்று கேட்டேன்.

காரியதரிசி என்ற சப்தம் காதில் விழுந்ததும் கம்பௌண்டர், "அப்படியானல் தயவு செய்துஒரு நிமிஷம் இருங்கள். இதோ டாக்டரே தங்களுடன் பேசுவார்" என்ருர். ஆனல் டாக்டர் என்னை ஒரு நிமிஷம் கூடக் காக்க வைக்கவில்லை. அடுத்த க்ஷணமே டாக்டரின் குரல் கேட்டது. கம்பௌண்டருக்குப் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்கும் டாக்டருக்கு கம்பௌண்டரின் கையி லிருந்து ரிஸீவரை வாங்கிக் கொள்வதற்கு எதற்காக ஒரு கணத்திற்கு மேல் ஆக வேண்டும்? டாக்டர் என் வீட்டு விலாசத்தைக் குறித்து வைத்துக் கொண்டார். கால்மணி நேரத்துக்குள் வீட்டை நோக்கிக் காரில் பறந்து வந்தார்.

இந்தக் கதையிலிருந்தே—என்ன கேட்கிறீர்கள்? பூ கதைதாஞ இது, நிஜம் இல்லையா என்ரு கேட்கிறீர்கள்? சரியாப்போச்சு! எழுத்தாளர் பிழைப்பை மேற்கொண் டிருக்கும் என்னிடமிருந்து கதையைத் தான் எதிர் பார்க்கலாம். நிஜத்தை எதிர்பார்க்க முடியாது. இதை இன்னும் தெரிந்து வைத்துக் கொள்ளாமல் இருக்கி றீர்களே? கதை தான் ஐயா, இது கதை தான்.

ஆனல் இந்தக் கதையை எதற்காகச் சொல்லவந்தேன் என்ருல் காரியதரிசி என்ருலே ஜனங்கள் அதற்கு எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிருர்கள் என்று எடுத்துக் காட்டுவதற்காகத்தான்.

இதனுலேயே வெகுப் பேர் தாங்கள் கொஞ்சம் பெரிய மனிதர் ஆனதும், அவசியம் இருக்கிறதோ, இல்லையோ ஒரு காரியதரிசி வைத்துக் கொண்டு விடுகிருர்கள். எப்படி மோட்டார் கார் வைத்துக்கொண்டால் பெருமையோ—அது எவ்வளவு தொத்தலான மோட்டார்க்காராய் இருந்தாலும் சரி—அதைப் போலவே காரியதரிசி வைத்துக் கொள்வதும் பெருமைதான்.

இந்த சமயத்தில், கார் வாங்கி வைத்துக் கொள்ளும் பெரிய மனிதர்களைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லி விட்டுத்தான் மேலே போக வேண்டும். ஏனெனில் கார் வைத்துக் கொள்வதற்கும் காரியதரிசி வைத்துக் கொள் வதற்கும் எத்தனையோ விதங்களில் பொருத்தம் இருக்கிறது.

பழைய காலத்தில் பெரிய மனிதர்களுக்கும் சாதாரண மனிதர்களுக்கும் வித்தியாசம் கண்டு பிடிப்பதற்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. எத்தனைக்கெத்தனை உடம்பில் காற்று படாதபடி அதிக ஆடை அணிந்து கொண் டிருக்கிருர்களோ அவ்வளவுக் கவ்வளவு பெரிய மனிதர்கள். இரண்டு பேரை நிறுத்தி வைத்து, அவர்களில் யார் அதிகப் பெரிய மனிதர் என்று கண்டு பிடிக்க வேண்டுமாஞல் அவர்கள் ஆடையை நிறுத்துப் பார்த்தால் போதும்.

யாருடைய ஆடை நிறைய எடை யிருக்கிறதோ அவர்தான் பெரிய மனிதர்.

ஆனால் கொஞ்ச காலமாக படித்தவர்கள் எல்லோரும் ஒரே மாதிரி ஆடை அணிய ஆரம்பித்து விட்டார்கள். கன்ன பின்ன வென்று நிறைய ஆடை அணிந்தால் அநாகரிகம் என்று சொல்வார்களோ என்று பயப்பட வேண்டியிருக்கிறது. எல்லாரும் ஒரே மாதிரி, ஒரே எடையுள்ள ஆடைகளை அணிய ஆரம்பித்து விட்டால் பெரிய மனிதர்களை எப்படி வித்தியாசம் கண்டு பிடிப்பது? நல்ல வேளையாக கார் வந்து பிரச்னையைத் தீர்த்து வைத்து விட்டது.

எவ்வளவுக் கெவ்வளவு நல்ல, அழகான, விலை உயர்ந்த காரிலிருந்து இறங்குகிறாரோ அவ்வளவுக் கவ்வளவு பெரிய மனிதர். யாராவது நம் வீட்டுக்கு வந்தால், அவர் எவ்வளவு பெரிய மனிதர் என்று கண்டுபிடிப்பதற்கு, வாசலுக்கு ஒரு நடை போய்விட்டு வந்தால் போதும். வாசலில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் கார் விலை உயர்ந்த காராய் இருந்தால், ரொம்பப் பெரிய மனிதர். சாதாரண 'போர்' டாய் இருந்தால் சாதாரணப் பெரியமனிதர், பேபி ஆஸ்டினாய் இருந்தால், சமீபத்தில் தான் பெரிய மனிதர் ஆனவர் என்று தெரிந்து கொண்டு, நாம் அவருடன் தகுந்தபடி பழகலாம்.

இதைப் போலவே தான் காரியதரிசிகள் விஷயமும். ஒருவர் ரொம்பப் பெரிய மனிதரா, அல்லது கொஞ்சம் தான் பெரிய மனிதரா என்பதை அவர் காரியதரிசி போட்டுக் கொண்டிருக்கும் உடை, அவர் வாங்கும் சம்பளம், அவர் அடிக்கும் ஜம்பம் இவற்றிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

காரியதரிசியைக் கொண்டுதான் தங்களை மதிப்பிடுகிறார்கள் என்பது அநேகப் பெரிய மனிதர்களுக்குத் தெரியும். ஆகவே அவர்கள் தாங்கள் எப்படி இருந்தாலும்

சரி, காரியதரிசி கூடியவரை டம்பமாகவே இருக்க வேண்டும் என்று கவலைப்படுவார்கள். அதற்காகக் காரியதரிசிக்கு நிறையச் சம்பளம் கொடுத்து நன்ருக வைத்துக் கொள்வார்கள்.

இத்தகைய காரியதரிசிகளின் பாடு வெகு கொண்டாட்டம்தான். இவர்களை எஜமானர்களும் நன்ருகக் கவனித்துக் கொள்வார்கள். எஜமானர்களின் தயவை நாடி நிற்கும் பொது ஜனங்களும் நன்ருகக் கவனித்துக் கொள்வார்கள். எஜமானின் காரியங்களையெல்லாம் காரியதரிசிகளே கவனித்துக் கொள்வதால், எந்தக் காரியமும் காரியதரிசியிடம் சொன்னுல்தான் நடக்கும். நாளடைவில் எஜமானர் காரியங்கள், எஜமானர் வீட்டுக்காரியங்கள் எல்லாம் காரியதரிசியிடம் சொன்னுல்தான் நடக்கும்.

சில வீடுகளில் காரியதரிசி வைத்ததுதான் சட்டம். கடைசிப் பையனுக்கு மூன்று கால் சைக்கிள் வேணுமா? அவன் எவ்வளவு மூக்கால் அழுதாலும் பயன் இல்லை. காரியதரிசி வாங்கிக் கொடுத்தால்தான் கொடுத்தது, இல்லாவிடில் இல்லை. எஜமானருக்கு ஒரு புது டிரஸ் வேண்டுமா? அவர் எவ்வளவு ஆசைப்பட்டும் பிரயோசனம் இல்லை. காரியதரிசி ஆர்டர் பண்ணினுல்தான் பண்ணினது. முதல் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகவேண்டுமா? தாயார் எவ்வளவு ஒற்றைக்காலில் நின்றும் பிரயோஜனம் இல்லை. காரியதரிசி கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொண்டு வரன் தேடினுல்தான் தேடினது. இல்லாவிடில் பெண் கல்யாணம் ஆகாமல் கன்னிகையாகவே இருக்க வேண்டியதுதான்.

காரியதரிசிகளுக்கு இருக்கும் செல்வாக்கைப் பார்த்து விட்டுத் தான் இப்பொழுது ஒவ்வொரு காரியாலயத்திலும் முன்பு மானேஜர் என்று இருந்தவர்கள் எல்லாரும் காரியதரிசி என்று பெயரை மாற்றி வைத்துக்கொள்ளத் தொடங்கியிருக்கிருர்கள். இன்ஷூரன்ஸ் கம்பெனி மானேஜரா, அவரும் ஒரு காரியதரிசிதான். பாங்கி

மானேஜரா, அவரும் ஒரு காரியதரிசிதான். பிலிம் கம்பெனி மானேஜரா, அவரும் ஒரு காரியதரிசிதான். இதிலிருந்து காரியதரிசி என்றாலே எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது என்று நீங்கள் தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் செல்வாக்குத் துளிகூட இல்லாத காரியதரிசிகளும் இல்லாமற்போகவில்லை. நிழல் என்று இருந்தால் வெய்யிலும் இருக்க வேண்டுமல்லவா! இந்த சங்கீத சபாக் காரியதரிசிகள், நாடக சபைக் காரியதரிசிகள், இன்னும் எத்தனையோ சங்கங்களின் காரியதரிசிகள் இவர்களைத்தான் குறிப்பிடுகிறேன்.

நான் முன்னொரு சமயம், ஒரு இலக்கிய சங்கத்துக்குக் காரியதரிசியாக இருந்தேன். ஐயோ! அப்பாழும் வேலையை இப்பொழுது நினைத்துக் கொண்டாலும் வயிறு பகீர் என்கிறது.

இரண்டு வாரத்திற்கு ஒருதடவை ஒரு மீட்டிங் ஏற்படுத்தியாக வேண்டும். மீட்டிங் என்றால் நானாகப் பேசினால் போதுமா? ஒரு தலைவர், ஒரு பிரசங்கி ஆக இரண்டு பேர் பொறுக்கியாக வேண்டும்.

இந்தத் தலைவரும், பிரசங்கியும், பொறுக்குவதில் தான் எத்தனை தொல்லைகள்! எவ்வளவுக் கெவ்வளவு நல்ல தலைவரோ, நல்ல பிரசங்கியோ அவ்வளவுக் கவ்வளவு அவர்களுக்கு கிராக்கி! மீட்டிங் நடக்க இன்னும் நாலுநாள் தான் இருக்கிறது என்னும் போது தான் நான் தலைவரையும் பிரசங்கியாரையும் தேடிப் போவேன். ஆனால் அவர்கள் தரிசனம் கிடைப்பதற்கே நான்கு நாட்கள் ஆகிவிடும். நான் அவரைத் தேடிப் போகிற ஒவ்வொரு சமயமும் வீட்டில் "இதோ இப்பொழுதுதான் போனார், இதோ வந்து விடுவார்" என்பார்கள். ஆனால் அவர்கள் சொல்லும் "இதோ" வுக்கு "நான்கு மணி சாவகாசம்" என்று அர்த்தம்.

சில சமயங்களில் இந்த "இதோ" ஐந்தாறுமணி சாவகாசமாகவும் நீளுவது உண்டு.

இந்தமாதிரி ஒவ்வொரு தடவையும் தலைவரையும், பிரசங்கியாரையும் பேட்டி காணுவதற்காக அவரவர்கள் வீட்டில் பழியாகக் கிடப்பதும் உண்டு. ஆனால் அந்தத் தலைவர்களும், பிரசங்கிகளும் சொல்லி வைத்தாற்போல் மீட்டிங் நடக்க வேண்டிய அன்றுதான் கிடைப்பார்கள். சொல்லி வைத்தாற்போல் அன்றைக்கென்று அவர்களுக்கு வேறிடத்தில் வேலை இருக்கும்.

"நான் என்ன பண்ணுவது? இப்படிக் கூறுவாயில், மீட்டிங் அன்றுஎன்று வந்து கேட்கிறீர்களே. நாலுநாள் முன்னதாக வரக்கூடாதா!" என்று கையை விரிப்பார்கள்.

"இல்லை ஸார், இந்த ஒரு தடவை தாங்கள் எப்படியாவது ஒப்புக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் என் மானம் போய்விடும்" என்று மானத்தை விட்டு அவர்களிடம் கெஞ்ச வேண்டும்.

ஆனால் என்ன மானத்தை விட்டாலும் அவர்கள் மசியமாட்டார்கள். கடைசியில் வேறு யாராவது தொத்தலான தலைவர், பிரசங்கியின் தயவைத்தான் நாடவேண்டும். சங்க அங்கத்தினர்கள் எல்லாம் நம் தலையைப்போட்டு உருட்டுவார்கள். "போதும், போதும்! இவர்கள்தானு அகப்பட்டார்கள்? அவர் அகப்படவில்லையா? இவர் அகப்படவில்லையா" என்று எல்லாம் கேட்பார்கள். இவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது, நாம் தலைவருக்காகவும், பிரசங்கிக்காகவும் அலைந்த அலைச்சல்?

சில சமயங்களில் இன்னொரு வயிற்றெரிச்சலும் ஏற்படுவது உண்டு. சாமி வரம் கொடுத்தாலும், பூசாரி வரம் கொடுக்காது என்பது போல் பிரசங்கியார் வரச் சம்மதிப்பார். ஆனால் பிரசங்கியார் இன்னார் என்று தெரிந்ததும் தலைவர் வரமாட்டேன்என்று தெரிவித்து விடுவார். பிரசங்கி

யாரும், தலைவரும். ஒருவருக்கொருவர் சிநேகிதர்கள் தானா, பிடித்தமானவர்கள் தானா என்று முன் கூட்டியே நாம் தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டும். இந்த வயிற்றெரிச்சலைக் கொண்டு போய் எங்கே சொல்ல? இத்தனைக்கும் இந்த காரியதரிசி வேலையினால் ஒரு தம்படி பிரயோஜனம் உண்டு என்று நினைக்கிறீர்களா? கிடையாது. சில சமயங்களில் கையை விட்டு ஐந்தும், பத்தும் செலவழிகிறதே யொழிய ஒரு தம்படி லாபம் கூடக் கிடையாது.

இருந்தும் இந்தக் காரியதரிசி பதவிக்கு எவ்வளவு போட்டி, எத்தனை அடிதடி என்கிறீர்கள்! நானே இந்தப் பதவிக்கு அப்பொழுது எத்தனை போட்டி போட்டிருப்பேன் என்று நினைக்கிறீர்கள்?

வருஷத்திற்கொரு தடவை சங்கத்தின் வருஷாந்தர அறிக்கையில் காரியதரிசி என்று நம் பெயரை அச்சடித்துக் கொள்ளலாம். அவ்வளவு தான் இதனால் நாம் கண்ட பெருமை, லாபம்!

# வேலைக்காரன்

# நோட்டீஸ் கொடுக்கிறான்!

என்ன வாழ்க்கை போங்கள்! என்ன வாழ்க்கை போங்கள்! என்ன வாழ்க்கை போங்கள்! இத்தகைய பேரிடி என் தலையில் விழும் என்று நான் கனவிலும் கருதவில்லை.

இது வரையில் நான் எத்தனையோ விஷயங்களில் ஏமாற்றம் அடைந்திருக்கிறேன். தீபாவளியின் போது கொடுப்பதாகச் சொன்ன வைர மோதிரத்தை மாமனார் கட்டாயம் கொடுத்து விடுவார் என்று நான் தலை தீபாவளி எப்பொழுது வரும் என்று வெகு ஆவலாக நாள் எண்ணிக் கொண்டிருந்தேன். வைர மோதிரம் கைக்கு ஏறினால் அதை எல்லாருக்கும் காண்பிக்காதது போல் காண்பிப்பது எப்படி என்பதைப் பற்றி எத்தனையோ திட்டங்கள் போட்டு வைத்திருந்தேன். இடது கையில் போட்டுக்கொண்டால் நன்றாய் இருக்குமா அல்லது வலது கையில் போட்டுக் கொண்டால் நன்றாய் இருக்குமா என்பதைப்பற்றி என் மனதுக்குள்ளேயே தீவிர விவாதங்கள் நடத்தினேன்.

ஆனால் குறிப்பிட்ட நாள் வந்தது, தீபாவளியும் வந்தது, ஆனால் வைரமோதிரம் வரவில்லை. வைரமோதிரம் கிடைக்க வேண்டுமானால் மாமனாருக்கு மாத்திரம் நல்லவனாக நடந்துகொண்டால் போதாது, மாமியாருக்கும் நல்லவனாக நடந்து கொள்ளவேண்டும் என்பதைப் பின்னர் தான் உணர்ந்தேன். ஆனால் உணர்ந்து என்னபண்ணுகிறது? வைர மோதிரம் போனது போனது தான்!

மாமனார் வீட்டில் கடன் வாங்கினால் திருப்பிக் கேட்க மாட்டார்கள் என்ற தைரியத்தில் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கி சரசுவுக்கு அழகான சில புடவைகள் வாங்கினேன். இப்பொழுது என்னடா வென்றால் பெரிய திண்டாட்டமாகி விட்டது. நான் மாமனார் வீட்டுக்குள் நுழைய வேண்டியது தான் தாமதம், "என்ன மாப்பிள்ளை வந்து—" என்று மாமனார் பல்லவியை ஆரம்பித்து வைக்கிறார்.

உடனேயே மாமியார், "என்ன மாப்பிள்ளை வந்து—" என்று அனுபல்லவி பாடுகிறாள். உடனேயே மச்சினன் களும் மச்சினிகளும் சரணம் பாடுகிறார்கள்.

அதிலும் என் மச்சினன்களில் பொல்லாத வாண்டுப் பயல் ஒருவன் இருக்கிறான். அவன் என்னைப் பார்க்க வேண்டியதுதான் தாமதம், கணக்குப் புத்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு கூடத்து ஜன்னலில் உட்கார்ந்து விடுவான். உடனே 'ராமன் கிருஷ்ணனிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கினான், ராமன் கிருஷ்ணனிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கினான்" என்று ஒரு கணக்கை, உரக்க என் காதில் படும்படியாக வாசிக்க ஆரம்பித்து விடுவான்.

அந்தப் பாழும் ராமன் எந்த வேளையில் கிருஷ்ண னிடம் கடன் வாங்கினானோ, அந்தக் கணக்கை வைத்துக் கொண்டு அந்த வாண்டுப் பயல் என்னை அவமானப் படுத்துவது என்று வைத்துவிட்டான். நான் சிறுவயதில் பெரியவர்களை அவமானப் படுத்திய போதெல்லாம், பெரியவர்கள் சொல்வார்கள்— "காலமே கெட்டுப் போய் விட்டது. பெரியவா சின்னவா என்ற வித்தியாசம் கிடையாது" என்று. அப்பொழுதெல்லாம் நான் அவர்கள் சொல்வதைக் கேட்டுச் சிரிப்பேன்—காலமாவது கெட்டுப் போகவாவது, பெரியவாளாவது, சின்னவாளாவது என்று.

காலம் கெட்டுப் போய்விட்டது என்று அவர்கள் சொன்னது எவ்வளவு உண்மை என்பது எனக்கு இப்பொழுது தான் தெரிகிறது. இல்லாவிடில் அந்த வாண்டுப் பயல் மச்சினன் நம்மை இப்படிப் பழிப்பானா?

ஆக இம்மாதிரி நான் எத்தனையோ விஷயங்களில் ஏமாற்றம் அடைந்திருக்கிறேன்.

ஆனால் என் வேலைக்காரன் கோபால் விஷயத்தில் இப்படி ஏமாற்றம் அடைவேன் என்று நான் கனவிலும் கருதவில்லை.

அத்தனைக்கும் ஒரு நல்ல வேலைக்காரன் கிடைப்பது எவ்வளவு கஷ்டம் என்பது உங்கள் எல்லாருக்கும் தெரியும். இது விஷயத்தை மகாகவி பாரதியார் வெகு அழகாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

கூலி மிகக் கேட்பார் கொடுத்த தெலாந் தாமறப்பார்
வேலை மிகவைத்திருந்தால் வீட்டிலே தங்கிடுவார்
ஏனடா நீ நேற்றைக்கு இங்கு வரவில்லை என்றால்
பானையிலே தேளிருந்து பல்லால் கடித்த தென்பார்.
வீட்டிலே பெண்டாட்டி மேற்பூதம் வந்த தென்பார்
பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டாம் நாளென்பார்
ஓயாமற் பொய்யுரைப்பார், ஒன்றுரைக்க வேறு செய்வார்
தாயாதிகளோடு தனியிடத்தே பேசிடுவார்
உள் வீட்டுச் செய்தி யெலாம் ஊரம் பலத்துரைப்பார்
எள் வீட்டில் இல்லை என்றால் எங்கும் முரசறைவார்
சேவகராற் பட்ட சிரமம் மிகவுண்டு கண்டீர்

கடைசியில் எனக்கு இந்த கோபால் என்னும் வேலைக்காரன் கிடைத்தான். ஆனால் பாரதியார் குறிப்பிட்ட வேலைக்காரர்களைப் போல் அவன் அத்தனை மோசமில்லை. பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டாவது நாள் என்று சொல்ல மாட்டான். பத்தாவது நாள் என்று தான் சொல்லுவான். ஓயாமல் பொய் சொல்லமாட்டான். மணிக்கு இரண்டு பொய்தான் சொல்லுவான். பானையிலே தேள் இருந்து பல்லால் கடித்தது என்று சொல்லமாட்டான். கொடுக்கால் தான் கொட்டிற்று என்று உண்மையைச் சொல்லுவான்.

இவ்வளவு நல்ல வேலைக்காரன் இன்று வேலையை விட்டு விலகப் போவதாக நோட்டீஸ் கொடுத்துவிட்டான்! வாழ்க்கை எவ்வளவு கடினம் பாருங்கள்!

என் வேலைக்காரன் கோபால் நோட்டீஸ் கொடுப்பதே ஒரு தனி விதம். திடீரென்று நினைத்துக்கொண்டு, "கணக்கைப் பாருங்க" என்பான். "கணக்கைப் பாருங்க"

என்றால் நான் அவன் கணக்கைப் பார்த்து, யார் யாருக்கு எவ்வளவு பணம் கொடுக்க வேண்டும் என்று தீர்மானிக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. ஏனெனில் அப்படிப் பார்த்தால் கோபால்தான் எனக்கு நிறைய பணம் கொடுக்க வேண்டி வரும். கோபால் தான் பொழுது விடிந்தால், பொழுது அஸ்தமித்தால், "என் அக்கா பெண் வந்திருக்கா, அட்வான்ஸ் பத்து ரூபாய் வேண்டும்; என் தங்கை பெண் வந்திருக்கா அட்வான்ஸ் ஐந்து ரூபாய் வேணும்; இன்று மாமனார் வரப்போகிறார், அட்வான்ஸ் ஆறு ரூபாய் வேண்டும்; என் மாமனார் போகப் போகிறார், அட்வான்ஸ் ஏழு ரூபாய் வேண்டும்" என்று அட்வான்ஸாகவே வாங்கிக் கொண்டிருக்கிறானே!

ஆக அவன் "கணக்கைப் பாருங்க" என்றால் "நான் வேலையை விட்டு நின்று விடுகிறேன்" என்று அர்த்தம். இது வரையில் கோபால் எத்தனையோ தடவை "கணக்கைப் பாருங்க" என்று சொல்லியிருக்கிறான். அவன் ஏதாவது தப்பு பண்ணி நான் கோபித்துக்கொண்ட ஒவ்வொரு தடவையும் கணக்கைப் பார்க்கச் சொல்லி யிருக்கிறான். நானும் கணக்கைப் பார்த்து அவன் எனக்கு எவ்வளவு பணம் பாக்கி கொடுக்கவேண்டும் என்று சொல்லி யிருக்கிறேன்.

நான், "இத்தனை பணம் பாக்கி, கொடுத்து விட்டுப் போ" என்று சொல்ல வேண்டியது தான் தாமதம், கோபால் அடங்கி விடுவான். "என்னுங்க இப்படிக் கோபிச்சுக்கிறீங்க?" என்று சொல்லி விட்டு வழக்கம் போல் தன் வேலையைப் பார்க்கத் தொடங்குவான்.

இந்தத் தடவையும் கோபால் அப்படித் தான் செய்வான் என்று நான் நினைத்தேன். "என்னடா ரொம்பப் பிரமாதமாகக் கணக்கைப் பார்க்கச் சொல்றே? நீ தாண்டா எனக்கு ரூபாய் நாற்பது கொடுக்கணும்? கொண்டா நாற்பது ரூபாயை" என்று சற்றுக் கடுமை யாகவே சொன்னேன். வழக்கம்போல் கோபால்,

"என்னுங்க சாமி இப்படிக் கோபிச்சுக்கிறீங்க?" என்று சொல்லி விட்டு வேலையைப் பார்க்கத் தொடங்குவான் என்றுதான் நினைத்தேன்! ஆனால் என்ன ஆச்சரியம்! "இந்தாங்க சாமி, உங்கள் நாற்பது ரூபாய்" என்று கோபால் பணத்தைக் கீழே வைக்கவே நான் திகைத்து விட்டேன்! ஐயோ நம் வேலைக்காரன் நோட்டீஸ் கொடுத்து விட்டானே என்று கதிகலங்கி விட்டேன்.

வேலைக்காரன் நோட்டீசு கொடுத்தால் என்ன, வேலைக்காரன் இல்லாமல் வாழ்க்கையை நடத்த முடியாதா என்று நீங்கள் கேட்கலாம்.

ஆனால் எங்கள் கோபால் என்னை ஆட்டி வைத்திருந்த ஆட்டத்தைப் பார்த்திருந்தீர்களானால் இந்தக் கேள்வி நீங்கள் கேட்க மாட்டீர்கள்.

கோபாலை நான் வேலைக்கு வைத்துக் கொண்ட சமயம் எனக்கு கல்யாணம் ஆகியிருக்கவில்லை. என்னை இப்பொழுது பாடாய்ப் படுத்தி பம்பரமாய் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கும் சரசு என்னை வந்து அடையவில்லை. ஆகவே சாமான் பண்டங்களைக் கவனித்துக் கொள் வதற்காகவாவது ஒரு வேலைக்காரன் இருக்கட்டுமே என்று கோபாலை வைத்துக் கொண்டேன்.

கோபால் வரும் வரையில் என்னுடைய சாமான், பண் டங்களை நானே கையாண்டதால் எந்த சாமான் எங்கிருக் கிறது என்று எனக்குத் தெரியும். அதனால் ஒவ்வொரு சாமானுக்கும் வீட்டில் ஒரு குறிப்பிட்ட இடம் நான் வைத் துக்கொண்டிருந்தேன் என்று நினைக்காதீர்கள். அதுதான் கிடையாது. ஆனால் ஒவ்வொரு சாமானையும் அதைக் கையாண்டு கொண்டிருந்த சமயம் என்ன செய்துகொண் டிருந்தேன் என்பதை ஞாபகப் படுத்திப் பார்த்து அந்த சாமான் இருக்கிற இடத்தைக் கண்டு பிடிப்பேன்.

உதாரணமாக பல் தேய்க்கும் பிரஷ்ஷை எங்கே வைத் தேன் என்று கண்டுபிடிக்க வேண்டுமானல், பல் தேய்த்த

தும் என்ன பண்ணினேன் என்பதை ஞாபகப் படுத்திப் பார்ப்பேன்.

பல் தேய்த்ததும் என்ன பண்ணினேன்?....ஆமாம், பல் தேய்த்ததும் என்ன பண்ணினேன்?....ஆ! இப்பொழுது தான் ஞாபகம் வருகிறது! பல் தேய்த்ததும் தேய்க்காதது மாக அன்று வந்த செய்திப் பத்திரிகையை வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்து விட்டேன். அப்படியானால் 'டூத் பிரஷ்' அந்தச் செய்திப் பத்திரிகைக்குள்தான் சிக் கிக்கொண்டிருக்கும் என்று செய்திப் பத்திரிகையைத் தேடிப் பார்ப்பேன். அப்படியே டூத் பிரஷ் செய்திப் பத்திரிகைக்குள் ஜவாஹர்லால் நேருவின் ரேடியோப் பிரசங்கத்துக்கும், ஜனாப் ஜின்னாவின் பத்திரிகை நிருபர் கள் பேட்டிக்கும் இடையில் அகப்பட்டுக்கொண்டு விழித் துக்கொண்டிருக்கும்.

அதேமாதிரி பௌன்டன் பேனாவை எங்கே வைத் தேன் என்று கண்டுபிடிக்க வேண்டுமானால், பௌன்டன் பேனாவைக் கொண்டு எழுதிக் கொண்டிருந்த சமயத்தில் என்ன பண்ணினேன் என்று ஞாபகப் படுத்திப் பார்ப் பேன். ஆமாம், பௌன்டன் பேனாவை வைத்துக்கொண்டு எழுதிக் கொண்டிருந்த சமயத்தில் என்ன பண்ணினேன்? என்ன, அதற்குள் மறந்து விட்டதே! ஆ! இப்பொழுது தான் ஞாபகம் வருகிறது. நான் பேனாவை வைத்து எழுதிக் கொண்டிருந்த சமயம் வேலைக்காரப் பெண், "தண்ணீர் நிரப்பியாகி விட்டது. குளிக்க வரலாம்" என்று சொன்னாள். அப்படியானால் நான் பேனாவை கையுடன் குளிக்கும் அறைக்கு எடுத்துக் கொண்டு போயிருக்க வேண்டும். குளிக்கும் அறைக்கு எடுத்துக் கொண்டு போயிருந்தால் கட்டாயம் அதை நான் அந்த சோப்புப் பெட்டியில்தான் வைத்திருக்க வேண்டும்.

அப்படியே அந்த சோப்புப் பெட்டியில் தேடினால் சோப்புடன் ஒட்டிக்கொண்டு பௌன்டன் பேனா காட்சி யளிக்கும்.

ஆக, இந்த ரீதியில் நான் ஒவ்வொரு சாமானையும் வைத்த இடத்தைக் கண்டுபிடித்துக் காலம் கடத்திக் கொண்டிருந்தேன். ஆனால் கோபால் வந்தாலும் வந்தான் எல்லா சாமான்களையும் அவன் தன் இஷ்டப்படி வைக்க ஆரம்பித்தான். எந்தச் சாமான் எங்கே இருக்கிறது என்று கண்டு பிடிக்க வேண்டுமா? கோபாலைக் கேட்டால் தான் தெரியும். குளிப்பதற்கு துண்டு எங்கே இருக்கிறது என்று கண்டுபிடிக்க வேண்டுமா? கோபாலைக் கேட்டால் தான் தெரியும். என் பூட்ஸ் எங்கே இருக்கிறது என்று தெரிய வேண்டுமா? கோபாலைக் கேட்டால் தான் தெரியும்.

ஆக இந்த ரீதியில் தான் இல்லாவிடில் நான் வாழ்க்கை நடத்த முடியாதபடி கோபால் செய்துவிட்டான்.

அதனால் தான் கோபால் நோட்டீசு கொடுத்து விட்டானே, நான் இனி என் வாழ்க்கையை எப்படி நடத்தப் போகிறேன் என்ற கவலை எனக்கு வந்து விட்டது.

கோபாலைக் கெஞ்சிப் பார்க்கலாம் என்றால், அவன் நிச்சயமாக மசியமாட்டான் என்று தோன்றுகிறது.

கோபாலுக்கும் என் மனைவி சரசுவுக்கும் அத்தனை பகைமை வளர்ந்து விட்டது.

கோபால் இல்லாவிட்டால் எந்த சாமான் எங்கே இருக்கிறது என்று என்னால் கண்டுபிடிக்க முடியாதே என்பதற்காக நான் கோபால் என்ன தப்பு பண்ணினாலும் கோபித்துக் கொள்வதில்லை. எத்தனை சாமான்களை உடைத்தாலும் கேட்பதில்லை. எத்தனை சாமான்களைத் தொலைத்தாலும் கேட்பதில்லை.

ஆனால் என் மனைவி சரசுவுக்கு நான் இப்படி கோபாலுக்கு இடம் கொடுப்பதே துளி கூடப் பிடிப்பதில்லை. அவன் என்ன தப்புப் பண்ணினாலும் சரி, உடனே அவனுடன் மொலு, மொலு என்று சண்டைக்கு ஆரம்பித்து விடுவாள்.

சரசு வருவதற்கு முன்னர் கோபாலை நான் ஒரு நாள் கூட சண்டை பிடித்ததில்லை. அவன் என்ன தப்பு பண்ணி

னாலும் கோபத்தைக் காட்டவே மாட்டேன். கோபத்தைக் காட்டினால் அவன் வேலையை விட்டு ஓடிப் போய்விட்டால் என்ன பண்ணுகிறது என்கிற பயம்!

அதற்குப் பதில், "என்னப்பா! கிளாஸ் டம்ளரையா உடைத்தாய்? ரொம்ப நல்லதாகப் போச்சு! சனியன் தொலைந்தது. நல்ல உடையாத வெள்ளி டம்ளராக வாங்கிக் கொண்டால் போச்சு" என்று சொல்வேன்.

ஆனால் சரசுவுக்கு எனக்குள்ள பொறுமை இல்லாமற் போகவே அவளுக்கும், கோபாலுக்கும் சண்டை அடிக்கடி நிகழும். அந்த சண்டை தான் இன்று வலுத்து, கோபால் நோட்டீசு கொடுத்து விட்டான்!

என் மனைவி சரசுவால் அல்லவா இன்று கோபால் நோட்டீசு கொடுத்து விட்டான் என்பதை நினைத்துப் பார்க்கும் போது எனக்கு ஹிந்து விவாக விதிகளின் மீது ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது! விவாக ரத்து செய்யும் உரிமை மாத்திரம் ஹிந்து புருஷர்களுக்கு இருந்தால் இன்று கோபால் நோட்டீசு கொடுக்கும் நிலைமை ஏற்பட்டிருக்குமா?

என்னமோ போங்கள்! நான் கோபால் இல்லாமல் என் வாழ்க்கையை எப்படி நடத்தப் போகிறேனோ, தெரியவில்லை. என்ன கடினமான வாழ்க்கை! என்ன கடினமான வாழ்க்கை!

நம் வாழ்க்கை இன்பமாக இருப்பதோ அல்லது துன்பமாக முடிவதோ எத்தனையோ காரணங்களைப் பொறுத்திருக்கின்றது. நல்ல சம்பாத்தியம் இருந்தால் வாழ்க்கை சுகமாக இருக்கும். நாம் சொன்னபடி கேட்கும் மனைவி இருந்தால், அதாவது, நான்கு பேருக்கு எதிரிலாவது நாம் சொன்னபடி கேட்பது போல பாவனை செய்யும் மனைவி இருந்தால் வாழ்க்கை சுகமாக இருக்கும். உற்றார், உறவினர்கள் நம்மை அதிகமாகப் பிடுங்காமலிருந்தால் வாழ்க்கை சுகமாக இருக்கும். நாம் கொடுக்கும் பணத்தில் இரண்டு, மூன்றுக்கு மேல் திருடாத வேலைக்காரர்கள் கிடைத்தால் வாழ்க்கை சுகமாக இருக்கும். நாம் போடும் துணியில் பாதிக்குமேல் கிழிக்காத வண்ணான் கிடைத்தால் வாழ்க்கை சுகமாக இருக்கும்.

ஆக, இது விஷயங்கள் நம் எல்லோருக்கும் தெரியும். ஆனால், இவை எல்லாவற்றையும் விட நம் வாழ்க்கையை அதிகமாய்ப் பாதிக்கக்கூடிய விஷயம்-அதாவது நபர் ஒருவர் இருக்கிறார்; அவரும் வெகு சமீபத்திலேயே இருக்கிறார். அப்படி அவர் நமக்கு வெகு பக்கத்திலேயே இருப்பதாலோ என்னமோ தான் நாம் அவருடைய முக்கியத்துவத்தைச் சரியானபடி உணர்வதில்லை. அந்த நபர் வேறு யாரும் இல்லை. எல்லாம் பக்கத்து பக்கத்து வீடுகளில் குடியிருக்கிறார்களே, இந்த அடுத்த வீட்டுக்காரர்கள், அவர்களைத்தான் சொல்லுகிறேன்.

என்னுடைய அனுபவத்தில் இந்த அடுத்த வீட்டுக்காரர்களைப்போல் நம் வாழ்க்கையை நல்லதுக்கோ, கெடுதலுக்கோ பாதிக்கக் கூடியவர்கள் வேறு யாரும் இல்லை யென்று கூறுவேன். எவ்வளவுக் கெவ்வளவு நாம் இவர்களுடன் நல்லுறவு பூண்டு சிநேகிதமாக இருக்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நமக்கு நல்லது. எவ்வளவுக் கெவ்வளவு சண்டை போட்டுக்கொண்டு நிற்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு கெடுதல். சண்டையும் வேண்டாம், சமாதானமும் வேண்டாம், நாம் உண்டு, நம் காரியம் உண்டு

என்று சிலர் இருக்கிருர்கள். ஆனல், அடுத்த வீட்டுக்காரர் இதைச் சும்மா விட்டு வைக்கமாட்டார். அடுத்த வீட்டுக் காரர் அகராதியில் சும்மா இருப்பது என்ருலும் சண்டை என்றுதான் அர்த்தம். ஆகவே, நாம் சும்மா இருந்தாலும், நாம் அவருடன் சண்டை போட்டுக் கொண்டிருப்பதாகவே வைத்துக்கொண்டு, நமக்குத் தீங்கு விளைக்க ஆரம்பித்து விடுவார்.

இது விஷயம் தெரியாமல், நான் என் பக்கத்து வீட்டுக் காரருடன், என்ன, என்ன கேட்கிறீர்கள்? ஆம் எல்லாம் இந்த அடுத்தவீட்டு அண்ணுசாமி அய்யர்தான். வேறு யார்? முதலில் இது விஷயம் தெரியாமல் நான் எங்கள் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருடன் பேசாமலேயே இருந்தேன். பக்கத்து வீட்டுக்காரர் யார், இன்னுர் என்று தெரிந்து கொள்ளாமல் இருப்பதே ஒரு கெளரவம் என்று தற் காலத்தில் ஒரு எண்ணம் பரவி வருகிறதல்லவா? அதை யொட்டி நான் அவர் யார், இன்னுர் என்று தெரிந்து கொள்ளாமலே இருந்தேன்.

ஒரு சமயம் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருக்கு வந்த கடிதத்தைத் தபால்காரன் எனக்குத் தவறுதலாகக் கொண்டுவந்து கொடுத்து விட்டான். பக்கத்து வீட்டுக்குப் பதில் எங்கள் வீட்டு நம்பர் கடிதத்தில் கண்டிருந்ததால் அந்தத் தவறுதலைச் செய்துவிட்டான்.

அதுவரையில் எனக்கு அடுத்த வீட்டு நபரின் பெயர் அண்ணுசாமி அய்யர் என்றே தெரியாது. ஆகவே, தபால் காரனைக் கண்டதும், “இது யாரப்பா அண்ணுசாமி அய்யர்! இந்த வீட்டில் யாரும் இல்லை” என்றேன். “பின் எந்த வீட்டில் இருக்கிருர்கள் ஐயா?” என்ருன் தபால்காரன். “அண்ணுசாமியை யார் கண்டா, கிண்ணுசாமியை யார் கண்டா” என்று இதற்குப் பதில் சொல்லிவைத்தேன்.

இதை அந்த அடுத்தவீட்டு அண்ணுசாமி அய்யர் கேட்டுக்கொண்டிருந்துவிட்டார். அன்றிலிருந்து எனக்கு ஆரம்பித்தது ஆபத்து.

அடுத்த வீட்டுக்காரர்களால் நமக்கு என்ன ஆபத்து ஏற்பட முடியும் என்று விஷயம் தெரியாதவர்கள் தான் கேட்பார்கள். முதலில் வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும், அவர்கள் வீட்டுப் பெண்கள் வைத்துக்கொண்டு ஓலமிடும் ஆர்மோனியப் பெட்டி இருக்கவே இருக்கிறது. தங்கள் பெண்களை ஆர்மோனியத்தை வைத்துக்கொண்டு அழும்படி ஏவி விட்டார்களானால் போதும், நமக்கு அதைவிட தலைவலி வேறு ஒன்றும் வேண்டாம்.

அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் என் மீது கோபித்துக்கொண்டு, தம் பெண்ணை சதா சர்வ காலமும் ஆர்மோனியப் பெட்டியை வைத்துக்கொண்டு ஓலமிடச் சொல்லவே எனக்கு என்ன பண்ணுவதென்றே தெரிய வில்லை. எத்தனையோ தலைவலிக்கு மருந்து கண்டுபிடித் திருக்கிறவர்கள், இந்தத் தலைவலிக்கு மருந்து கண்டுபிடித் திருப்பதாகத் தெரியவில்லை. சிலர் இதற்குச் சரியான யுக்தி தங்கள் வீட்டுப் பெண்களையும் ஆர்மோனியத்தை வைத்துக் கொண்டு அலறச் சொல்லுவதுதான் என்று நினைக் கிறார்கள். இதைப் போலப் பைத்தியக்காரத்தனம் வேறொன்றும் கிடையாது. காசைக் கொடுத்து, தேளைக் கொட்டிக் கொள்வது என்று சொல்வார்களே, அதுகூட இதைவிடத் தேவலை என்று ஆகிவிடும்.

நான்கு பேர்கள் நம்மைப்பற்றி உயர்வாகவோ தாழ் வாகவோ எண்ணுவது இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரால்தான். அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் மனது வைத்தால் நம்மைப்பற்றி எல்லாருக்கும் பிரமாதமான அபிப்பிராயம் ஏற்பட்டு விடும்படி செய்ய முடியும். "ஆஹா! அவரா! அவர் ரொம்ப நல்ல மனிதராச்சே! குணம் தங்கக் கம்பியாச்சே" என்றெல்லாம் நாலு பேரிடம் நம்மைப் பற்றிச் சொல்லி நமக்கு நல்ல பெயர் வாங்கிக் கொடுத்து விடலாம். இல்லை, நம்மை அவருக்குப் பிடிக்கவில்லையோ, அதற்கும் அவர் மனது வைத்தால் போதும். ஒரே நிமிஷத்தில் அதள பாதாளத்திற்கு அழுத்தி விடலாம்.

"ஓஹோ! இன்னுரா! அந்த மனுஷனைப் போல் அயோக்கியன் வேறு யாரும் கிடையாதுங் காணும்" என்று நாலு பேரிடம் சொன்னால் போதும், அதற்குப் பிறகு யாரும் நம்மை நம்பவே மாட்டார்கள்.

இந்தக் காலத்தில்தான் யாரும் யாரைப் பற்றியும் நேரில் பழகி அபிப்பிராயம் கொள்ளுவது கிடையாதே? அடுத்த வீட்டுக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள், எதிர்த்த வீட்டுக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள், பக்கத்து வீட்டுக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டு, அதைக் கொண்டுதானே நம்மைப்பற்றி அபிப்பிராயம் கொள்ளுகிறார்கள்.

இன்னும் நம் வீட்டுப் பெண்களுக்கு நல்ல வரன் கிடைப்பதும், நம் வீட்டுக்கு நல்ல மாட்டுப் பெண்கள் கிடைப்பதும் இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர்களைத்தான் பொருத்திருக்கிறது. நம் வீட்டுப் பெண்களைப் பார்க்க வருகிறவர்களோ, அல்லது நம் வீட்டுப் பிள்ளைகளுக்குப் பெண் கொடுக்க வருகிறவர்களோ நேரே இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரிடமல்லவா செல்லுகிறார்கள்? அவர்களை யல்லவா நம் பெண் அழகா இல்லையா, நம் பெண்ணுக்குச் சமைக்கத் தெரியுமா, தெரியாதா, நம் பெண்ணுக்குப் பாடத் தெரியுமா, தெரியாதா, நம் பெண்ணுக்குப் பரதநாட்டியம் தெரியுமா தெரியாதா என்றெல்லாம் கேட்கிறார்கள். நம் சம்பளம் என்ன, அந்தஸ்து என்ன, நாம் சீர் செலுத்திகள் செய்யக் கூடியவர்களா, இல்லையா, நாம் மாட்டுப் பெண்களை நன்றாக வைத்துக் கொள்ளுவோமா மாட்டோமா ஆகிய இது விஷயங்களைக் கூட அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைக் கேட்டுத்தான் தெரிந்து கொள்ளுகிறார்கள்.

ஆகவே, அடுத்த வீட்டுக்காரர்களுடன் நல்லுறவு கொண்டிருந்தால் தான் நம் வீட்டுப் பெண்களுக்கும், பிள்ளைகளுக்கும் நல்ல இடத்தில், காலா காலத்தில் கல்யாணம் நடக்கும்.

இதைத் தவிர இன்னும் எத்தனையோ காரியங்களுக்காகவும் அடுத்த வீட்டுக்காரர்களுடன் சிநேகமாக இருப்பது மிகவும் அவசியம். திடீரென்று, நம்மைத் தேடிக் கொண்டு நம் சிநேகிதர்களோ, உறவினர்களோ வந்து சேர்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்கள் வருகிறபோதெல்லாம் காப்பிப் பொடியும், கறி காயும் தயாராக வைத்துக் கொண்டிருக்க முடியுமா? அதுவும் நம் சிநேகிதர்களும் உறவினர்களும் எவ்வளவு அகாலத்தில் வந்து நம் கழுத்தை அறுக்க முடியுமோ அவ்வளவு அகாலத்தில் வந்தல்லவா நம் கழுத்தை அறுப்பார்கள். இம்மாதிரி நெருக்கடியான காலங்களில் நம் மானத்தைக் காப்பது இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர்கள் தான். தம் வீட்டில் இருக்கும் காப்பிப் பொடியையும் கறி காயையும் கொடுத்து உதவி புரிகிறவர்கள் அவர்கள்தான்.

இன்னும் நம் மனைவியால் நமக்கு அதிகச் செலவு ஆகாமல் பார்த்துக்கொள்ள வேண்டுமானாலும் இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர்களின் சிநேகிதமும் ஒத்துழைப்பும் மிகவும் அவசியம். அடுத்த வீட்டுக்காரர் எத்தனைக் கெத்தனை தம் மனைவிக்கு அடிக்கடி புதுப்புடவை வாங்கிக் கொடுக்காமலும், சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகாமலும் இருக்கிறாரோ அவ்வளவுக் கவ்வளவு நமக்கு நல்லது. இல்லையோ ஆபத்துதான்.

அடுத்த வீட்டுக்காரர் தம் மனைவிக்கு மாதம் ஒரு புதுப் புடவை வாங்கிக் கொடுத்தாரானால் நாம் மாதம் இரண்டு புதுப்புடவை வாங்கிக் கொடுத்தாக வேண்டும். வாரம் ஒரு தடவை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போனாரானால், நாம் வாரத்துக்கு இரண்டு நடை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போயாக வேண்டும்.

அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் தமக்கு என்மேல் உள்ள கோபத்தைக் காண்பிப்பதற்கு முதலில் இந்த யுக்தியைத்தான் கையாண்டார். இது தெரியாமல் நான் அவர் வீசிய வலையில் விழுந்து விட்டேன். அவர் தம் மனைவிக்குப்

புதுப்புடவை வாங்கி கொடுக்கக் கொடுக்க நானும் என் மனைவிக்குப் புதுப் புதுப் புடவையாக வாங்கிக் கொடுத்துக் கொண்டே போனேன். கடைசியில்தான், ஏமாந்தது நான் தான், அண்ணுசாமி அய்யர் அல்ல என்று தெரிந்து கொண்டேன். ஏனெனில், அடுத்தவீட்டு அண்ணுசாமி அய்யர் தம் மனைவிக்கு வாங்கிக் கொடுத்ததவ்வளவும் இரவல் புடவைகள். என்னை ஏமாற்றுவதற்காக அவர் செய்த காரியம் அது.

இன்னும் தனிக் குடித்தனம் நடத்தும் நபர்கள் கட்டாயம் அடுத்த வீட்டுக்காரர்களுடன் சிநேகிதமாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அடுத்த வீட்டுக் கிழவி அடிக்கடி நம் வீட்டுக்கு வந்துகொண்டிருப்பாள். அப்பொழுது அக் கிழவியை சாக்கிட்டாவது நம் மனைவி நம்மிடம் பய பக்தியுடன் நடந்து கொள்ளுவாள்.

ஆக, எத்தனையோ காரியங்களை உத்தேசித்து நம் வாழ்க்கை இன்பகரமாக இருக்க வேண்டுமானல் அயலார் நல்லுறவு மிகவும் அவசியம்.

குடும்பத் தலைவர் என்ற ஹோதாவில் பேசவேண்டும் என்று எனக்கு அழைப்பு வந்ததும் என் மனைவி சரசு என்னை ஒரு விதமாகப் பார்க்க ஆரம்பித்துவிட்டாள். இந்த வானொலி நிலையத்தாருக்கு இத்தனை துணிச்சலா, நம்முடைய பட்டத்தைப் பிடுங்கி நம் கணவருக்குக் கொடுப்பதற்கு என்று அவளுக்கு ஆத்திரம்! உங்கள் எல்லாருக்கும்தான் அனுபவமாய் இருக்குமே, ரேஷன் கார்டுகளில் என்னமோ நம்மைத்தான் குடும்பத்தலைவர் என்று போட்டிருக்கிறதே யொழிய உண்மையில் குடும்பத் தலைவர் நாம்இல்லை என்பது.

குடும்பத்தலைவர் என்று வானொலி நிலையத்தார் என்னை அழைத்ததுபற்றி சரசு என்னைப் பழிக்கவும் ஆரம்பித்து விட்டாள். இதுவரை காப்பி சாப்பிட அழைக்க வேண்டுமானாலும், சாப்பாடு சாப்பிட அழைக்க வேண்டுமானாலும், இன்னும் வேறு எதற்காக அழைக்க வேண்டுமானாலும், குழந்தைகளைப் பார்த்து, "அப்பாவை அழைத்துக்கொண்டு வா" என்று சொல்லிக் கொண்டிருந்தவள், "போய் குடும்பத் தலைவரை காப்பி சாப்பிட அழைத்துக்கொண்டு வாடி" "போய் குடும்பத் தலைவரை சாப்பாடு சாப்பிட அழைத்துக்கொண்டு வாடா" என்று எகத்தாளம் பண்ண ஆரம்பித்து விட்டாள்.

ரேஷன் கார்டுகளில் என்னமோ நம்மைத்தான் குடும்பத்தலைவர் என்று போட்டிருக்கிறது. ஆனால் இந்த ரேஷன் கார்டுகள் வருவதற்கு வெகு காலத்துக்கு முன்னரே இந்தப் பதவியை என் மனைவி சரசு என்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டுவிட்டாள். குடும்பத்தலைவர் நான் இல்லை, தான்தான் என்ற நினைப்பு என் மனைவிக்கு ஏற்பட்டதற்கே காரணம் இந்தப் பொல்லாத வாடிக்கைக் காரர்கள்தான்.

பால்காரனாக இருந்தாலும் சரி, நெய்க்காரனாக இருந்தாலும் சரி, கறிகாய்க்காரியாக இருந்தாலும் சரி,

அல்லது இந்தத் தயிர்க்காரியாக இருந்தாலும் சரி, எல்லோரும் உள்ளே நுழையும்போதே "அம்மாவை" க் கூப்பிட்டுக் கொண்டுதான் நுழைகிறார்கள். வீட்டில் 'அய்யா' ஒருவர் இருக்கிறார் என்ற நினைப்பே இவர்களுக்கு ஒரு பொழுதும் ஏற்படுவது கிடையாது.

வீட்டில் "அம்மா"வைத் தவிர அய்யாவும் ஒருவர் இருக்கிறார் என்ற நினைப்பு இவர்களுக்கு நடுவில் நடுவில் எப்பொழுதாவது ஏற்படவேண்டும் என்பதற்காக நான் இவர்களுடன் நடுவில் எப்பொழுதாவது பேச்சுக் கொடுப்பேன். குடும்பத்தலைவர் என்ற ஹோதாவில் நான் எல்லா விஷயங்களையும் கவனித்துக்கொண்டிருப்பது போல், "என்னப்பா நெய் வரக் வர மோசமாக இருக்கிறது" "என்னய்யா வரவர பால் இப்படி ஒரே தண்ணியாக கொண்டு வருகிறாயே ?" என்று கேட்பேன்.

ஆனால் நம் வார்த்தைக்கு அவர்கள் ஏதாவது மதிப்புக் கொடுத்தால் தானே ? "நீ சும்மா இரு சாமி! அம்மாவே ஒண்ணும் குத்தம் சொல்லலியாம். நீ என்னமோ பிர மாதமா சொல்ல வந்துட்டே" என்று ஏக வசனத்தில் நம்மை அடக்கிப்பேசுவார்கள். அந்த சமயம் என்று தான் நம் மனைவியும் அவர்களுக் கெதிரிலேயே நம்மை மட்டம் தட்ட ஆரம்பித்து விடுவாள். "இந்தாங்கோ, உங்களைத்தானே! நீங்க பேசாமல் உங்கள் காரியத்தைப் பாருங்கோ. இதிலெல்லாம் நீங்கள் எதற்காகத் தலை யிடறேள்? புருஷாளா லட்சணமா உங்க வேலையைப் பாப்பேளா—" என்று சொல்லுவாள்.

வீட்டில் நிலைமை இப்படி இருக்கும் சமயத்தில் நல்ல வேளையாக இந்த ரேஷன் காரர்களாவது என்னைக் குடும்பத் தலைவர் என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்களே என்று எனக்குப் பரம சந்தோஷம். ஆனால் நாம் எவ்விதத்தில் குடும்பத் தலைவர் ? குடும்பத்தில் உள்ள கஷ்டங்களையெல்லாம் தலைமேல் போட்டுக்கொள்ள வேண்டுமா ? அதற்கு நாம் குடும்பத் தலைவர். குடும்பச்

செலவிற்கு வேண்டிய பணத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமா? அதற்கு நாம் குடும்பத் தலைவர். குடும்பம் இருக்க ஒரு வீடு கண்டுபிடிக்க வேண்டுமா? அதற்கு நாம் குடும்பத் தலைவர். இந்த ரேஷன் காலத்தில் சிசுசம்ரக்ஷணம் செய்ய வேண்டுமா? அதற்கு நாம் குடும்பத் தலைவர்.

இந்தக் காலத்தில் சிசுசம்ரக்ஷணம் இருக்கிறதே, அதை நினைத்துத் கொண்டாலே தலைசுற்றுகிறது. இந்தக் காலத்தில் முதலில் பிறக்கும்போதே அந்தப் பால் புட்டியைக் கொண்டா, இந்தப் பால் புட்டியைக் கொண்டா என்று கேட்டுக் கொண்டேதான் குழந்தைகள் பிறக்கின்றன. அது என்னமோ தெரியவில்லை, இந்தக் காலத்தில் குழந்தைக்கும் தாயாருக்கும் சம்பந்தம் ஒரு பத்து மாதகாலம்தான் இருக்கிறது. அது தாயார் வயிற்றில் இருக்கிறதே ஒரு பத்து மாதகாலம், அவ்வளவு தான்.

குழந்தைக்குப் பால் கொடுக்க வேண்டியதொல்லை யோ, அல்லது பொறுப்போ தற்கால தாயார்களுக்குக் கிடையாது. இந்தப் பொறுப்பை கானடாவிலோ, அல்லது ஆஸ்திரேலியாவிலோ உள்ள ஒரு மாடு—அது பசு மாடோ, எருமை மாடோ தெரியாது—ஏற்றுக்கொண்டு விட்டதால், அந்தப் பொறுப்பை அந்த மாடு எப்பொழுது நிறைவேற்றப் போகிறது என்று காத்துக் கிடக்க வேண்டி யிருக்கிறது. மாடு என்னவோ தன் பொறுப்பை நிறைவேற்றத்தான் செய்கிறது. அதனுடைய பாலும் ஒரு பால் புட்டியாக மாறி இங்கு வந்து சேர்கிறது. ஆனல் அந்தப் பால் புட்டி நம் கைக்கு வந்து சேர்வதற்குள் நாம் படும் பாடு அந்தக் கள்ள மார்க்கெட் காரர்களைக் கேட்டால் தான் தெரியும்.

பால் கொடுக்க வேண்டிய முக்கியமான பொறுப்பும், அதுவும் தாயாரே செய்யக்கூடிய அந்த ஒரு பொறுப்பும், தாயாருக்கு விட்டுவிடுகிற படியால், குழந்தை வளர்ப்பு முழுவதும் நம் தலையிலேயே விழுந்து விடுகிறது.

குழந்தைக்குப் பால் கொடுப்பது, குளிப்பாட்டுவது, சட்டை போடுவது எல்லாம் நம் தலையில்தான். இந்தப் பொல்லாத குழந்தைகள் இருக்கின்றனவே, ஏதோ தலையிலெழுத்து பாவம், அம்மா செய்யவேண்டிய வேலையை அப்பா செய்கிறார், அதற்குமேல் அவரைக் கஷ்டப் படுத்தக் கூடாது என்று இருக்கலாமோல்லியோ, அதுதான் கிடையாது.

நன்றியறிதலுக்கு இந்தக் குழந்தைகளை மிஞ்சவே முடியாது. அப்பாதானே புட்டிப் பாலை பீடிங் பாட்டிலில் போட்டுக் கொடுக்கிறார் என்று நம்மையே விடாப்பிடியாகப் பிடித்துக் கொள்ளுகின்றன. குழந்தைக்கு ஏதாவது காரியம் தாயாரே செய்ய முன் வந்தாலும், குழந்தை தாயாரிடம் போவதில்லை. இதுதான் சாக்கு என்று தாயாரும் குழந்தையின் எல்லாப் பொறுப்பையும் தகப்பனார் மீது போட்டு விடுகிறாள்.

"இதோ பாருங்கோ. நான் என்ன பண்ணுவேன். குழந்தை நீங்க குளிப்பாட்டி விட்டால் தான் குளிக்கிறேன் என்கிறது. நீங்கள் சாதம் ஊட்டினால் தான் சாப்பிடு கிறேன் என்கிறது. நீங்கள் சட்டை போட்டால் தான் போட்டுக் கொள்ளுகிறேன் என்கிறது" என்று பொறுப்பை நம் தலையில் போட்டு விட்டுச் சென்று விடுகிறாள். ஆகவே எல்லா வேலையும் நம் தலைமேல் விழுகிறது. குழந்தையைக் குளிப்பாட்டுவதும் நாம், சாதம் ஊட்டுவதும் நாம், சட்டை போடுவதும் நாம், வெளியே தூக்கிக்கொண்டு போவதும் நாம். நம் குழந்தைக்கு நம் தோள்தான் பாந்தமாகப் படுமே ஒழிய அம்மா இடுப்பில் அதனால் அரைக்கணமும் இருக்க முடியாது.

இதை எல்லாம் செய்து விட்டுப் போகலாம். ஆனால் ஒரே ஒரு காரியம்தான் என்னால் செய்ய முடிவதில்லை. குழந்தை அழுதால், அதை எப்படிச் சமாதானப்படுத்துவது

என்றுதான் தெரியவில்லை. நமக்கு இந்தக் காரியந்தான் தெரியாது என்று குழந்தைக்கு எப்படித் தெரிகிறதோ தெரியவில்லை. ஒருநாளில் நூறு தடவைக்குக் குறையாமல், நம்மை இந்தக் காரியம் செய்யும்படி தூண்டுகிறது. குழந்தையின் அழுகையை அடக்குவதற்கு, தொன்று தொட்டு ஒருவழி கையாண்டு வருகிறார்களே அதே வழியைத் தான் நானும் கையாள வேண்டியிருக்கிறதே யொழிய புது வழி ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லை.

குழந்தைகள் எதற்காக அழுதாலும் சரி, அம்மாவைக் காணோமே என்று அழுதாலும் சரி, கையில் இருக்கும் கரிக் கட்டியைப் பிடுங்கினதற்காக அழுதாலும் சரி, விளக்கெண்ணெய் கொடுத்ததற்காக அழுதாலும் சரி, இக் குழந்தைகளைச் சமாதானப்படுத்துவதற்கு தொன்று தொட்டு ஒரே ஒரு வழிதான் கையாண்டு வந்திருக்கிறார்கள். அதுதான் குழந்தையின் கையில் கொஞ்சம் 'கக்கு' கொடுப்பது. ஆனால் க்ரூப் க்ரூப் பாகப் பிரித்து, ஒரு க்ரூப்புக்குக் கொஞ்சம், இன்னொரு க்ரூப்புக்கு அதைவிடக் கொஞ்சம், கடைசி க்ரூப்புக்குக் கொஞ்சமோ கொஞ்சம் என்று சர்க்கரை கொடுக்கும் இந்தக் காலத்தில் குழந்தையை ஒவ்வொரு சமயமும் சமாதானப் படுத்து வதற்கு நாம் கக்குக்கு எங்கே போவது?

பக்கத்து வீட்டுக்காரரைவிட நம் சம்பளம் குறைவு தான் என்பதை நமக்குச் சதாகாலமும் சுட்டிக் காட்டுவதே போல் நமக்குச் சம்பளம் அல்லது வருமானத்தை யொட்டி சர்க்கரை கிடைக்கிறது. இதனால் நாம் படும் அவமானம் போதாதென்று நம் குழந்தை அழும் ஒவ்வொரு சமயமும் நம் மனைவி வேறு நாம் குறைவாகச் சம்பளம் வாங்கு கிறோம் என்னும் விஷயத்தை ஞாபகப்படுத்தி நம் மானத்தை வாங்குகிறாள்.

"ஏன் அடுத்த வீட்டில் மாத்திரம் அவர்களுக்கு தலைக்கு ஒரு வீசை சர்க்கரை கொடுக்கும்போது நமக்கு மாத்திரம் ஏன் முக்கால்வீசை" என்று குழந்தை அழும்

ஒவ்வொரு சமயமும் நம்மைக் கேட்கிறாள். இந்தக் கேள்விக்கு நான் என் வெட்கத்தை விட்டு, எத்தனையோ தடவை பதில் சொல்லியாகிவிட்டது. அவள் இன்னும் புரிந்து கொண்ட பாடில்லை.

மனைவிதான் புரிந்து கொள்ளவில்லை. இந்தக் குழந்தைகளாவது புரிந்து கொள்ளக் கூடாதா? முதலாவது குரூப்பில் உள்ள பெற்றோர்களைப் படைத்த குழந்தைகள் கக்குக்காக அழும் அழுகையில் தாங்கள் முக்கால் பங்கு தான் அழலாம் என்று மூன்றாவது குரூப்பிலுள்ள குழந்தைகள் தெரிந்து கொள்ள வேண்டாமா? ஒரு வீசை ரேஷன் சர்க்கரை வாங்கும் வீட்டுக் குழந்தைகளை விட முக்கால்வீசை ரேஷன் வாங்கும் வீட்டுக் குழந்தைகள் இரண்டு மடங்கு அழுவேன் என்று சண்டித்தனம் பிடித்தால் இது நடக்கிற காரியமா என்ன?

ஆனால் வாழ்க்கையில் என்னமோ இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. குழந்தைகள் தான் ஐயா, சின்னக் குழந்தைகள், தெரியாமல் அழுகின்றன, அது அழும் போதெல்லாம் அதற்கு நாம் கக்கு கொடுத்துவிட்டு நாம் சர்க்கரையில்லாமல் காப்பி குடித்துக் கொள்ளுகிறோம். ஆனால் துணியில்லாமல் கஷ்டப்படும் இந்தக் காலத்தில் குழந்தைக்கு நிமிஷத்துக்கொரு புது சட்டை கொடுக்க வேண்டும் என்று மனைவி பிடிவாதம் பிடிக்கிறாளே அதற்கு நாம் என்ன பண்ணுவது?

முன்காலத்தில் மடி, ஆசாரம் பார்க்கும் பெரியவர்கள் வீட்டில் இருப்பார்கள். குழந்தையின் விழுப்புச் சட்டை தங்கள் மீது பட்டு தாங்களும் விழுப்பாகிவிடுவோம் என்று குழந்தைகளை எப்பொழுது பார்த்தாலும் பிறந்த மேனி யாகவே நிறுத்தி வைப்பார்கள். அதனால் குழந்தைகளுக்கு அதிகம் சட்டை வாங்க வேண்டிய பிரமேயம் கிடையாது.

இப்பொழுதோ அந்த மடி, விழுப்பெல்லாம் போய் விட்டது. எவ்வளவுக் கெவ்வளவு நாம் குழந்தைக்கு விதம் விதமாகச் சட்டை போடுகிறோமோ அத்தனைக் கத்தனை

நாம் பணக்காரர்கள் என்று பக்கத்து வீட்டுக்காரர்கள் நினைத்துக் கொள்வார்களாம். பக்கத்து வீட்டுக்காரர்கள் நம்மை பணக்காரர்கள் என்று நினைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக என் மனைவி குழந்தைகளுக்கு மணிக்கு ஒரு புதுவிதச் சட்டை மாற்றும்படி உத்தர விடுகிறாள்.

ஆனால் நாம் குழந்தைக்கு சட்டை மாற்ற வேண்டி யது தான் தாமதம், "உன்னைவிட நான் அதிகப் பணக்காரன்" என்று காட்டிக் கொள்வதற்காக பக்கத்து வீட்டுக்காரர்கள் தங்கள் குழந்தைகளுக்கு அரை மணிக்கு ஒரு சட்டை வீதம் மாற்றுகிறார்கள். "உங்களைவிட நாங்கள் பணக்காரர்கள்" என்று காட்டிக்கொள்வதற்காக நாம் உடனே கால்மணிக்கு ஒரு தடவை குழந்தைகளுக்கு சட்டை மாற்றுகிறோம். இப்படியாக பக்கத்து வீட்டுக்கும், பக்கத்து வீட்டுக்கும் நடக்கும் போட்டியில் குழந்தைகளின் சட்டைத்துணி ஏகத்தாராக அதிகரித்துக் கொண்டு போகிறது.

சட்டைத்துணி அதிகரிக்க, அதிகரிக்க, குழந்தை களுக்கு வரும் வியாதிகளும் அதிகரித்துக்கொண்டு போகின்றன. நானும் பார்க்கிறேன், தற்காலத்து வைத்தி யர்கள், கடையில் எந்த மருந்து கிடைக்காதோ, அந்த மருந்தைத்தான் குழந்தைகளுக்குக் கொடு என்று எழுதிக் கொடுக்கிறார்கள். அவ்வளவுதான், திரும்பவும் அலைச்சல் தான், திரும்பவும் கள்ள மார்க்கெட்தான், திரும்பவும் பணம் நஷ்டம்தான்.

சின்னக் குழந்தைகள் விஷயந்தான் இப்படியென்றால் பெரிய குழந்தைகள் விஷயம் கேட்கவே வேண்டியதில்லை. சின்னக் குழந்தைகளாவது நாம் போட்ட சட்டையைப் போட்டுக்கொள்ளும். நாம் கொடுத்த ஆகாரத்தைச் சாப் பிடும். மீறி அழுதால் ஒரு ஸ்பூன் சர்க்கரை இருக்கவே இருக்கிறது, அதன் அழுகையை அடக்குவதற்கு.

ஆனல் பெரிய குழந்தைகளை இப்படி ஸ்பூன் சர்க்கரை கொடுத்து ஏமாற்ற முடியுமா? நம்ப பயல் பாலு இன்னும் மூன்ருவது கிளாஸ்கூட வாசிக்கவில்லை, அதற்குள் பௌண்டன் பேனவைக் கொண்டா, டையைக் கொண்டா, காலரைக் கொண்டா, அதைக் கொண்டா, இதைக் கொண்டா என்று கேட்கிருன். நாம் ஏதாவது மாட்டேன் என்று சொன்னல் அவன் போடுகிற சத்தம் வீட்டைக் கிடுகிட வைக்கிறது. வீட்டின் ஒரு பாகத்திலேயே குடியிருக்கும் வீட்டுக்காரன் 'உடனே வீட்டைக் காலி பண்ணிவிடு' என்று யமகிங்கரனைப் போல் எதிரில் வந்து நிற்கிருன். இந்த வீட்டுக்காரனுக்குப் பயந்துகொண்டு எல்லாக் குழந்தைகளையும் சத்தம் போடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் குடும்பத் தலைவராகிய நம் மீதுதான். ஆனல் வீட்டு வாடகை ரூ. 50 என்ருல் இந்த சத்தம் போடாமல் பார்த்துக் கொள்ளும் செலவு ரூ. 100 ஆகும்போதுதான் வயிற்றெரிச்சலாக இருக்கிறது.

முன்காலமாக இருந்தால் குழந்தைகள் விஷமம் பண்ணினல் அல்லது சண்டித்தனம் பண்ணினல் ஆத்திரம் தீரக் குழந்தைகள் முதுகில் இரண்டு அறை விட்டால் போதும். இல்லையா, குழந்தைகளை அடிக்க மனதில்லையா, "ஏன் குழந்தைகளைக் கத்தவிடுகிருய்" என்று மனைவியை ஒரு அதட்டல் போட்டால் போதும். குழந்தைகளின் முதுகில் இரண்டு அறை கொடுக்கும் பொறுப்பை அவள் ஏற்றுக்கொள்வாள். குழந்தைகள் வீல் என்று ஒரு குரல் அழுதுவிட்டு கப்சிப்பென்று அடங்கிவிடும்.

ஆனல் வீடு கிடைக்காமல் திண்டாடும் இந்தக் காலத்தில் இந்த முறைகளையெல்லாம் கையாளுவதற்கு இல்லை. அதற்காகக் குழந்தைகள் என்ன கேட்டாலும் அதைக் கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை. பெரிய பையன் சைக்கிள் வேண்டும் என்கிருன்? சரி, வாங்கிக் கொடு. சின்ன பையன் கிரிக்கட் பாட் வேண்டும் என்கிருன? சரி, வாங்கிக் கொடு. பெரிய பெண் புதுப்

புடவை வேண்டும் என்கிறாளா? சரி, வாங்கிக் கொடு. சின்னப்பெண் சித்தாடை வேண்டும் என்கிறாளா? சரி, வாங்கிக் கொடு. சரி, வாங்கிக் கொடுப்பதைத் தவிர இப்பொழுது வேறு ஒன்றும் பேசக்கூடாது.

நாம் நாலும் ஐந்தும் கொடுத்துத் தான் குழந்தை களுக்குத் துணி வாங்கிக் கொடுக்கிறோம். அதை ஜாக்கிரதையாகவாவது வைத்திருக்கிறதுகளா, கிடையாது. என்னமோ தேசபக்தி, தேசபக்தி என்கிறார்களே, என் கடைசி பையனுக்கு இருக்கிற தேசபக்தி வேறு யாருக்கும் கிடையாது என்று கூறுவேன். பாரத பூமியின்மீது, பல்லாயிரக் கணக்கான பெரியோர்களின் அடிச்சுவடு பட்ட இந்திய மண்ணின் மீது, என் கடைசி பையனுக்கு இருக்கிற மோகம் வேறு யாருக்கும் கிடையாது என்று கூறுவேன். ஏதாவது புதுச்சட்டை போட வேண்டியதுதான் தாமதம், உடனேயே ஓடிப்போய் பெரியோர்களின் அடிச்சுவடு பட்ட அந்த மண்ணில் புரண்டு விளையாடி விட்டுப் புழுதியுடன்தான் திரும்பிவருவான். பையனுக்கு இத்தனை தேசபக்தி இருந்தால் குடும்பத் தலைவர்களாகிய நம்மால் துணி வாங்கிக் கட்டுமா, என்ன, நீங்களே சொல்லுங்கள்.

ஆக இந்த ரீதியில் குடும்பத் தலைவர் ஹோதாவில் நாம் நடத்தும் சிசு சம்ரக்ஷணம் எவ்வளவு கடினமானது என்று நான் இன்னும் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் என்ன பண்ணலாம்? நம் எல்லாரையும் விட, மிகப் பெரிய குடும்பத் தலைவராகிய பகவான் மீது பாரத்தைப் போட்டுவிட்டு யுத்தம் போனாற்போல் இந்த ரேஷன் காலமும் போய் ஒரு நாள் நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையுடன் வாழ்க்கையை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லை.

என்னமோ போங்கள், என் ஆத்திரத்தில் என்னமோ சொல்லிவிட்டேன். ரேடியோ நிலையத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பியதும், நிஜக் குடும்பத் தலைவரான என் மனைவி, ரேஷன் கார்டு குடும்பத் தலைவரான என்னை, இப்படி யெல்லாம் என் கஷ்டங்களை பகிரங்கமாக எடுத்துச் சொன்னதற்காக என்ன பாடாய்ப் படுத்தி பம்பரமாய் ஆட்டிவைக்கப் போகிறாளோ!

ஒவ்வொரு சமயம் நம் ஜனங்களை நினைத்துக் கொள்ளும்போது எனக்கு அழுவதா அல்லது சிரிப்பதா என்றே தெரிவதில்லை. கடைசியில் மூளை குழம்பிப் போய் அழத் தொடங்கியிருக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங் களேன். ஏனெனில் இந்தக் காலத்தில் கூடப் பொழுது போகாமல், "ஐயோ பொழுது போகவில்லையே!" என்று தவிப்பவர்கள் இருக்கிறார்கள். இவர்களை நினைத்தால் அழுகை வருமா, வராதா, நீங்களே சொல்லுங்கள்.

அழுகை விஷயத்தில் என்னமோ நாம் ஸ்திரீகளைத் தோற்கடிக்க முடியாது. ஒப்புக் கொள்ளுகிறேன். இருந் தாலும் இந்தக் காலத்தில் கூடப் பொழுது போக வில்லையே என்று தவிப்பவர்களைக் கண்டால் ஆண்களாகிய நம் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீராவது வராமல் இருக்காது.

இந்தக் காலத்தில் உள்ளது போல் பழைய காலத்தில் பொழுது போக்குவதற்குச் சௌகரியங்கள் இருந்ததாகத் தெரியவில்லை. முதலில் பொழுதைக் கையில் வைத்துக் கொண்டு, "பொழுது போகவில்லையே, பொழுது போக வில்லையே" என்று அவஸ்தைப்பட்டால் அல்லவோ சௌ கரியங்கள் ஏற்படுவதற்கு? பழைய காலத்தில், "ஒரு நாளைக்கு 24 மணி நேரம் தானே இருக்கிறது, 48 மணி நேரம் இருக்கக் கூடாதா" என்று ஜனங்கள் வருத்தப் பட்டிருப்பதாகவே தெரிகிறது. வயிற்றுச் சாப்பாட்டைச் தேடுவதிலேயே நாள் முழுதும் செலவழிந்த காலம் அது.

ஆனால் நாகரிகம் அதிகரிக்க, அதிகரிக்க ஜனங்கள் வயிற்றுச் சாப்பாட்டுக்காக உழைக்கு நேரம் குறைந்து கொண்டே வர, பொழுது போக்கு நேரம் அதிகரிக்க, அதிகரிக்க, பொழுது போக்கும் சாதனங்களும் அதிகரித்து வந்திருக்கின்றன.

இந்தக் காலத்தில்தான் பொழுது போக்குவதற்கு எவ்வளவு சௌகரியங்கள் என்கிறீர்கள்? வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும் சினிமாக் கொட்டகை இருக்கவே

இருக்கிறது. அதுவும் சர்க்கார் நீளத்தைக் கட்டுப் படுத்தி வைத்திருக்கிறார்களோ இல்லாவிடில் மூன்றுமணி நேரமும் நான்குமணி நேரமும் அலுப்பு சலிப்பில்லாமல் ஓடும் தமிழ் படங்கள் இருக்கவே இருக்கின்றன.

இந்த சினிமாக் கொட்டகை ஒன்றினாலேயே நம்நாட்டு ஸ்திரீகள் ஒரு நாளைக்கு ஒன்பது மணி நேரம் பொழுது போக்கலாம். அதாவது மத்தியானம் மூன்று மணியிலிருந்து ராத்திரி 12 மணி வரை உள்ள நேரத்தைப் போக்கலாம் என்று நான் கணக்கெடுத்திருக்கிறேன். சினிமாக் கொட்டகைகளில் மூன்று ஆட்டங்கள் நடக்கின்றன. அந்த மூன்று ஆட்டங்களுக்கும் போவது, ஒரு கொட்டகையில் நடக்கும் மூன்று ஆட்டங்களையோ அல்லது மூன்று கொட்டகைகளில் நடக்கும் வெவ்வேறு ஆட்டங்களையோ பார்ப்பது என்றுதானே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அது தான் இல்லை. நீங்கள் இந்த மாதிரி ஏமாந்து போவீர்கள் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஏன், நீங்கள் ஏமாற வேண்டும் என்றுதானே இப்படிச் சொன்னேன் ?

மூன்று மணியிலிருந்து பன்னிரண்டு மணிவரை என்று நான் குறிப்பிட்டது மூன்று ஆட்டங்களைப் பார்க்க அல்ல, ஒரே ஒரு ஆட்டத்தைப் பார்ப்பதற்குத்தான் ஸ்திரீகளுக்கு ஒன்பது மணி நேரம் செலவழிகிறது என்று கணக்கெடுத்திருக்கிறேன்.

ஆறுமணி ஆட்டத்திற்குப் போவதற்கு, குறைந்த பட்சம் மூன்று மணியிலிருந்தே தயார் செய்து கொள்ள வேண்டும். இந்த புடவையைக் கட்டிக்கொள்ளலாமா அந்தப் புடவையைக் கட்டிக்கொள்ளலாமா என்று மாறி மாறி, பெட்டியையும் பீரோவையும் திறப்பதற்கும் மூடுவதற்கும் குறைந்த பட்சம் ஒரு மணி நேரமாவது ஆகும். ஒரு மணி நேரமா, எப்படிப் போதும் என்று அநேக ஸ்திரீகள் முணுமுணுப்பது என் காதில் விழுகிறது. அதற்காகத்தான் நான் குறைந்த பட்சம் ஒரு மணி நேரம்

என்று சொன்னேன். நீங்கள் இரண்டு மணியிலிருந்தே டிரஸ் பண்ணிக்கொள்ள ஆரம்பியுங்களேன், நான் வேண்டாம் என்று சொல்கிறேன்?

சரி, நான்கு மணிக்கு டிரஸ் ஆகி முடிந்ததும் பஸ்ஸைப் பிடிப்பதற்காகப் பஸ் ஸ்டாண்டுக்குச் செல்ல வேண்டும். அங்கே பஸ் ஸ்டாண்டில் குறைந்த பட்சம் ஒரு மணி நேரமாவது பொழுதுபோகும். நான்கு மணியிலிருந்து ஐந்து அல்லது ஐந்தரை மணி வரை அந்தப் பக்கமாக வரும் ஒவ்வொரு பஸ்ஸிலும் அடித்துப்பிடித்துக் கொண்டு ஏறுவோம். கடைசியில் கண்டக்டர் பிரயாணிகளை எண்ணிப் பார்த்துவிட்டு "ஓவர்லோட்" என்று நம்மைக் கீழே இறக்கி விட்டு விடுவான். அதில் ஒண்ணரை மணி நேரம் பொழுது போகும். கடைசியில் தெய்வாதீனமாக ஒரு பஸ்ஸில் தொத்திக் கொண்டு நிற்க நமக்கு இடம் கிடைக்கும். கடைசியில் ஆறுமணிக்கு சினிமா கொட்டகை போய்ச் சேர்வோம் என்று வைத்துக்கொள்ளுங்களேன்.

சினிமா கொட்டகைக்குப் போனால் அங்குள்ள ஜனங்கள் இன்னொரு புது விதத்தில் தங்கள் பொழுதைப் போக்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். சினிமா ஆரம்பிப்பதற்கு இரண்டு, மூன்று மணி நேரத்திற்கு முன்னாலேயே அவர்கள் இந்தப் பொழுது போக்குக் காரியத்தை நடத்தத் தொடங்கி 'க்யூ' வரிசை என்று சொல்லுவார்களே அந்த வரிசையில் டிக்கட் வாங்கு வதற்காக எல்லோரும் நின்று கொண்டிருப்பார்கள். இரண்டு, மூன்று மணி நேரம் பொழுதை இப்படிச் சிரம மில்லாமல் கழிப்பதற்கு, இந்தக் க்யூ வரிசையைக் கண்டு பிடித்தானே அவனை எவ்வளவு வாழ்த்தினாலும் போதாது.

க்யூ வரிசை என்றதும் அதைப் பற்றிய வேடிக்கைக் கதை ஒன்று ஞாபகம் வருகிறது. அதை இப் பொழுது சொன்னால்தான் சொன்னது. இல்லாவிடில் பின்னர் நீங்கள் எங்கே கேட்கப் போகிறீர்கள்?

ஜெர்மனியில் யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயத்தில், உணவுப் பண்டங்கள் கிடைப்பதற்கு மிகத் திண்டாட்டமாய் இருந்ததாம். எந்தச் சாமான் வாங்கு வதற்கும், ஜனங்கள் க்யூ வரிசையில் நின்று வெகு நேரம் காத்துக் கொண்டிருப்பார்களாம்.

ஒரு ஜெர்மானியனுக்கு ஒரு கஜம் துணி வாங்க வேண்டி இருந்ததாம். இதற்காக அவன் ஒவ்வொரு துணிக்கடையாகப் போய் ஒன்பது மணி நேரமும், பத்து மணி நேரமும், க்யூ வரிசையில் நின்று பார்த்தான். நின்று கால் ஒடிந்ததுதான் மிச்சமே ஒழிய, துணி கிடைத்தபாடில்லை.

ஒரு நாள் அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இத்தனை கஷ்டத்துக்கும் அந்த ஹிட்லர் அல்லவா காரணம் என்று நினைத்தான். உடனே போய் ஹிட்லரைக் கொன்று விட்டுத்தான் மறுகாரியம் என்று ஹிட்லர் மாளிகையை நோக்கி ஓடினான். மாளிகையை அடைந்தான். என்ன ஏமாற்றம்! அங்கே ஒரு மைல் நீளத்துக்கு ஜனங்கள் க்யூ வரிசையில் நின்று கொண்டிருந்தார்கள். எல்லோரும் இவனைப்போல் ஹிட்லரைக் கொல்வதற்காக அங்கு வந்த வர்கள்!

ஏதோ சொல்ல ஆரம்பித்தவன் எங்கேயோ போய் விட்டேன். ஆறுமணிக்குச் சினிமா கொட்டகைக்குப் போய்ச் சேர்கிறோமா? ஆறுமணியிலிருந்து ஆறரை மணி வரை டிக்கட் வாங்குவதற்காக க்யூ வரிசையில் நிற்கிறோம். பிறகு ஆறரை மணியிலிருந்து ஒன்பது மணிவரை சினிமா பார்க்கிறோம்.

ஒன்பது மணியிலிருந்து பத்து மணிவரை திரும்பவும் பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருப்பதில் பொழுது போகும். ஆனால் பஸ் என்னமோ கிடைக்காது. எல்லா பஸ்களிலும் கூட்டம் அதிகமாக இருக்குமாதலால் பஸ் ஸ்டாண்டில் நிற்கக்கூடச் செய்யாது. கடைசியில் பஸ்ஸுக் காகக் காத்து பிரயோசனம் இல்லை என்கிற ஞானோதயம்

நமக்கு பத்துமணிக்குத் தான் வரும். பத்து மணிக்கு மேல் ஏதாவது ஜட்கா கிடைக்குமா என்று தேடிப் பிடித்து வாடகை பேசுவோம். ஆனால் ஜட்கா வண்டிக்காரன் வாடகை பேசுகிறோம் என்பதையே மறந்து, நாம் அவன் வண்டி, குதிரை இரண்டையும் விலைக்குக் கேட்பதாக நினைத்துக்கொண்டு, ஏகத்தாராக இத்தனை வேண்டும், அத்தனை வேண்டும் என்று கேட்க ஆரம்பிப்பான்.

ஜட்கா வண்டிக்காரனுடன் பேரம் பேசுவதில் இன்னும் ஒருமணி நேரம், அதாவது பத்து மணியிலிருந்து பதினோறு மணிவரை பொழுது போகும். கடைசியில் நாம் சொன்ன வாடகைக்கு ஜட்கா வண்டிக்காரன் வருகிறான் என்னும் சமயத்தில்— இல்லை, இல்லை, தப்பாகச் சொல்லி விட்டேனே—ஜட்கா வண்டிக்காரன் சொன்ன வாடகைக்கு நாம் இணங்கி வருகிறோம் என்னும் சமயத்தில் இன்னும் வேறு யாராவது நம்மைப்போல் பஸ் கிடைக்காது தவிப்பவர்கள் வந்து ஜட்காவைத் தாங்கள் அமர்த்திக் கொண்டுபோய் விடுவார்கள். நடந்து வருவதைத் தவிர வேறு வழியில்லை என்று தெரிந்து, பதினோறு மணியிலிருந்து பன்னிரண்டு மணிவரை உள்ள பொழுதை நடந்து வருவதிலேயே போக்கலாம்.

ஆக, தற்கால நாகரிகத்தில் ஒரு சினிமாவுக்குச் செல்வதில் ஒன்பது மணி நேரம் பொழுது போய்விடுகிறது. இருந்தாலும் தினம் சினிமாவுக்குப் போய்க்கொண்டு இருக்க முடியுமா? இல்லை, தினம் ஒன்பது மணி நேரம் தான் நமக்குப் பொழுது போக்குவதற்காகக் கிடைக்கிறதா? அப்பொழுது என்ன பண்ணுவது என்று கேட்கலாம்.

கல்யாணத்துக்குப் பெண்ணை வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு இது விஷயத்தில் ஒரு நல்ல சௌகரியம் இருக்கிறது. மாப்பிள்ளை வேட்டையை விட வேறு உத்தமமான பொழுதுபோக்கு வேறு என்ன இருக்கிறது, கேட்கிறேன்? பெண்ணின் ஜாதகத்துக்குக் காப்பி எடுத்தல், எடுத்த

காப்பிகளுக்குக் குங்குமம் தடவுதல், பிறகு அவற்றை எடுத்துக்கொண்டு வீடு வீடாகச் செல்லுதல், நல்ல பையன் ஜாதகம் எங்கே கிடைக்கும் என்று விசாரித்தல், கிடைத்த பையன்களின் ஜாதகத்தைத் தூக்கிக்கொண்டு ஜோஸியர் வீட்டுக்குச் செல்லுதல், ஜாதகம் பொருந்தியிருந்தால் பையனின் பெற்ரோர்களை நம் வீட்டுக்கு வரவழைத்தல், லௌகீக விஷயமாக, வெகு நாஸுக்காகப் பேச்சு நடத்தல், பிறகு அவர்கள் கேட்கும் வரதக்ஷிணையை நம்மால் கொடுக்க முடியுமா என்று சமையலறையில் மனைவியுடன் மந்திராலோசனை நடத்தல், பிறகு கூடத்தில் காத்துக் கொண்டிருக்கும் பெற்ரோர்களிடத்தில் வந்து அத்தனை வர தக்ஷிணை கொடுக்கக் கட்டாது என்று கையை விரித்தல்—ஆகிய இத்தனை காரியங்கள் இதில் இருக்கின்றன.

ஆகவே தான் சில பெற்ரோர்கள் இதைப் பொழுது போக்காகக் கருதாமல் ஒரு தனி வேலையாகவே கருது கிருர்கள். வருஷத்தில் மூன்று மாதம் இந்த வேலையைக் கவனிப்பது என்று திட்டம் போட்டு வருஷத்தில் மூன்று மாதம் ஏதோ சாக்குச் சொல்லி லீவு வாங்கி விடுகிருர்கள். ஆனல் என்னைக் கேட்டால் இந்த மாப்பிள்ளை வேட்டைக் காரியத்தை ஒரு தனி வேலை என்று கருதாமல் ஒரு பொழுது போக்காக ஏற்றுக் கொள்வது தான் நல்லது என்று கூறுவேன்.

ஐயா, கல்யாணம் ஆகியிருக்கிறது, ஆனல் கல்யாணத் துக்கு நிற்கும் பெண் இல்லை, அப்பொழுது என்ன பண்ணு கிறது என்று கேட்கிறீர்களா? என்ன இப்படிக் கேட் கிறீர்கள்? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவதுபோல் அல்லவா இருக்கிறது நீங்கள் சொல்வது? மனைவியுடன் சண்டை போடுவதை விட வேறு ருசிகரமான ஸ்வாரஸ்யமான பொழுது போக்கு வேறு கிடையாது ஐயா!

வீட்டில் எனக்குப் பொழுது போகவில்லையென்ருல் நான் இந்தக் காரியத்தைத் தான் செய்வது என்று வைத்

திருக்கிறேன். வீட்டின் சமையலறையில் நுழைந்து ஒரு நிமிஷம் நம் கண்ணேட்டத்தைச் சுற்றும் முற்றும் விட்டால் போதும், மனைவியுடன் சண்டை பிடிப்பதற்கு நமக்கு நூற்றெட்டுக் காரணங்கள் கிடைக்கும். ஏதாவது டப்பா திறந்திருக்கும், அல்லது மூடியிருக்கும். அடுப்பு அதிகமாக எரிந்து கொண்டிருக்கும், அல்லது எரியாமல் புகைந்து கொண்டிருக்கும். பூனை பாலைக் குடித்துக்கொண் டிருக்கும் அல்லது குடித்துவிட்டு ஓடிப்போய்க் கொண் டிருக்கும். அவற்றில் ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக் கொண்டு, மனைவியுடன் ஒரு சண்டையை ஆரம்பித்து வைத்தால் பொழுது போவதே தெரியாது. இன்றைக் கெல்லாம் இந்தப் பொழுது போக்கை நடத்திக் கொண்டே போகலாம்.

இல்லை, இந்தக் காரணங்கள் இல்லாவிடில் மனைவியுடன் சண்டை பிடிக்க இன்னும் எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. நம் மாமனர் நமக்குச் செய்த சீர் வரிசைகளைப் பற்றிய சண்டை இருக்கவே இருக்கிறது. அதைப்பற்றி பேச ஆரம்பித்தால் போதும், நமக்கு வெகு நல்ல பொழுது போக்குக் கிடைத்துவிடும். ஆனல் வெகு பேருக்கு என்னுடைய யோசனை பிடிக்கவும் செய்யாது, ஒத்தும் வராது. ஏனெனில் மனைவியுடன் சண்டை பிடிப்பது என்பது அவ்வளவு எளிதான காரியமன்று. வெகு சாதுவான மனைவிமார்களைப் படைத்தவர்களுக்குத் தான் இது சாத்தியமாகும். பாக்கிப் பேர் வேறு ஏதாவது பொழுது போக்குத் தேடவேண்டியதுதான்.

வாசக சாலைகளுக்குப் போதல், நல்ல புஸ்தகங்களாகப் படித்தல் முதலியன நல்ல பொழுது போக்கு என்று பெரியவர்கள் சொல்லுகிருர்கள். ஆனல் அந்தப் பெரிய வர்கள் வார்த்தையின்படி எத்தனை பேர் நடப்பார்கள் என்பது சந்தேகம்தான். பழைய காலத்துப் பயித்தியக்கார ஜனங்கள் தான் மத்தியான வேளைகளில் ராமாயணம், பாகவதம் என்று ஏதாவது படித்து வந்தார்கள் என்ருல்

நாமும் அதையே பின்பற்ற வேண்டுமா, என்ன? ஆகவே தற்காலத்தில் சீட்டு ஆடுதலை ஒரு பொழுது போக்காக வைத்திருக்கிறார்கள். இந்த சீட்டாட்டத்தையே வேடிக்கையாக "ராமாயணம் படித்தல்" என்று நண்பர்கள் குறிப்பிடுவது உண்டு.

இன்னும் சிலர் பொழுது போகவில்லையென்றால் உடனே பக்கத்தில் உள்ள ஹோட்டலுக்குள் நுழைந்து ஒரு கப் காப்பி சாப்பிடுவது என்று வைத்திருக்கிறார்கள். அல்லது புகையிலை போடுவது, அல்லது சிகரெட் பிடிப்பது என்று வைத்திருக்கிறார்கள்.

இப்படியெல்லாம் பொழுதைப் போக்குவதைப் பற்றி எனக்குத் துளிகூட ஆட்சேபமில்லை. ஆனால் பத்திரிகைக்காரன் என்ற முறையில் ஒரே ஒரு பொழுதுபோக்கு மாத்திரம் எனக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை. பழைய காலத்தில் இல்லாமல் இந்தக் காலத்தில் தோன்றிய பொழுது போக்குகளில் இதுவும் ஒன்று. அதாவது பொழுதை எப்படிப் போக்குவது என்று தெரியாமல் தவித்து, கையில் ஒரு பேனாவும் இரண்டு காகிதமும் கிடைத்ததோ, உடனே உட்கார்ந்து ஒரு சிறு கதையோ, அல்லது கட்டுரையோ எழுதி பத்திரிகைக்கு அனுப்பி விடுவது. வெளியில் உள்ளவர்கள் "ஆஹா! இது நல்ல காரியம்தானே! இதனால் இலக்கிய விருத்தி எவ்வளவோ ஏற்படும்" என்று சந்தோஷப் படலாம். ஆனால் அக்கதைகளையும் கட்டுரைகளையும் படித்து என்னைப்போல் தலைவலியினால் திண்டாடுகிறவர்களைக் கேட்டால் அல்லவோ தெரியும், தற்கால நாகரிகத்தின் பொழுது போக்கைப் பற்றி?

ஆக இந்த மாதிரி எத்தனையோ விதங்களில் தற்கால நாகரிகத்தில் புதுப்புது பொழுதுபோக்குகள் ஏற்படுகின்றன.

ஆனால் ஒரே ஒரு பொழுது போக்கு மட்டும் மாறாமல் ஆதிகாலம் தொட்டே தொடர்ந்து நம் கூடவே இருந்து

வருகிறது. இதைப் பற்றி மாத்திரம் இரண்டு வார்த்தைகள் கூறிவிட்டு முடித்து விடுகிறேன்.

நான் சொல்லப் போகும் இந்தப் பொழுது போக்குக்கு பழைய காலம் தொட்டு இன்றுவரை இருந்துவரும் செல்வாக்கைப் பார்க்கும் போது, இந்தப் பொழுது போக்கு அழியவே அழியாது; முன் காலத்தில் செழித்தோங்கி வளர்ந்தது போலவே பின் காலத்திலும் செழித்தோங்கி வளர்ந்துகொண்டே போகும்-என்றுதான் தோன்றுகிறது. எங்கே, அந்தப் பொழுது போக்கு என்ன என்று உங்களால் ஊகிக்க முடியுமா, பாருங்கள். பின்னல் நான் சொல்லப் போவதுடன் சரிதான என்று ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம். இதோ சொல்லுகிறேன். நம் சுப்பிப் பாட்டிகள் வீடு, வீடாக நுழைந்து இந்த வீட்டு வம்பை அந்த வீட்டிலும் அந்த வீட்டு வம்பை இந்த வீட்டிலும் மாறி மாறி பரிமாறிக் கொண்டே போகிறார்களே, அந்தப் பொழுது போக்குத் தான்.

உலகத்தில் எத்தனையோ நாகரிகங்கள் வரலாம், போகலாம். எத்தனையோ பொழுது போக்குகள் வரலாம், போகலாம். ஆனல் இந்த ஒரு பொழுது போக்கு மாத்திரம் மார்க்கண்டேயனைப் போல் என்றும் நம்முடன் கூடவே இருந்து கொண்டு தானிருக்கும்.

"வந்துவிட்டாரா, விருந்தாளியுடன் வந்தவர்" என்னும் இவ்விஷயத்தைக் கேட்டதும் சில பெரியவர்கள் ஆச்சரியப் படலாம். "இது என்னடா வேடிக்கையாயிருக்கிறது. நாம் யாரையாவது நம் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட்டால் அவர்கள் என்ன தனியாகவா வருவார்கள்? யாரையாவது இரண்டு சிநேகிதர்களைக் கூட்டிக் கொண்டுதான் வருவார் கள். அதற்காகக் கூட வந்தவர்களைப் பார்த்து, " ஐயோ, வந்துவிட்டானே என்று மனம் எரிவோமா" என்று அவர்கள் கேட்கலாம். ஏனெனில் அவர்கள் காலத்தில் விருந்தாளி யாரையாவது கூடக் கூட்டிக்கொண்டு வந்தால் அதைக் குறித்துக் கவலைப்படுவது கிடையாது.

நான் சிறு பையனாக இருந்தபோது என் தகப்பனார் அடிக்கடி யாரையாவது சாப்பிடக் கூப்பிடுவதைப் பார்த் திருக்கிறேன். "இந்தாடி, இன்றைக்கு இரண்டு பேரைச் சாப்பிடக் கூப்பிட்டிருக்கிறேன், கூடச் சமைத்துவை" என்று சொல்லி விட்டுப் போய்விடுவார். ஆனால், சாப்பாட்டு வேளைக்கு இரண்டு பேருக்கு நாலு பேராக வந்து நிற்பார்கள். சாப்பிட வருகிறவர்கள் என்ன தனியாக வருவார்களா? யாரையாவது கூட அழைத்துக்கொண்டு தான் வருவார்கள். விருந்துக்குப் புறப்படுகிற சமயத்தில் அவர்களுடன் யாராவது பேசிக்கொண்டிருந்தார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்களைக் கழுத்தைப் பிடித்து என்கூட வராதே என்று சொல்ல முடியுமா? ஆகவே தங்களுடன் கூட அழைத்துக்கொண்டுதான் வருவார்கள்.

ஆனால், இதற்காக என் தாயாரோ, தகப்பனாரோ, முகத்தைச் சுளித்துக் கொண்டதை நான் பார்த்தது கிடையாது. 'ஐயோ வந்துவிட்டானே' என்று விருந்தாளி யுடன் வந்தவரைப் பார்த்து நினைத்துக்கொண்டதும் கிடையாது.

"விருந்தாளியுடன் வந்தவர்கள் யார் என்பது நமக்குத் தெரியாது. அவர்களுடன் நாம் என்ன பேசுவது" என்று

என் தகப்பனார் இருக்கமாட்டார். அவர்களுடன் பேசி, அவர்கள் இன்னார் என்று தெரிந்துகொண்டுவிடுவார்.

"வாங்கோ, வாங்கோ.... நீங்கள் யார் என்று தெரியவில்லையே? .... ஆனால் முகம் மாத்திரம் எங்கேயோ பார்த்தால் போலத்தான் இருக்கு" என்று ஒரு வார்த்தையைப்போட்டு வைப்பார். உடனே விருந்தாளியுடன் வந்தவர் தமக்கு பூர்வீகம் விஷ்ணம்பேட்டை என்றும் தாம் நாணுவய்யர் பேரன் என்றும் தெரிவிப்பார். விஷ்ணம் பேட்டை என்றதும் என் தகப்பனாரின் முகம் மலரும். தஞ்சாவூர் ஜில்லாவில் இவருக்குத் தெரியாத கிராமம் கிடையாது. "விஷ்ணம் பேட்டையா....அப்படிச் சொல்லும். அதுதானே பார்த்தேன். விஷ்ணம் பேட்டை என்று முகத்திலேயே எழுதி ஒட்டியிருக்கிறதே. ஆமாம், நாணுவய்யர் என்றீரே, எந்த நாணுவய்யர்? பாய்ச்சல் காளை நாணுவய்யரா?"

"ஊஹூம் அந்த நாணுவய்யர் அல்ல. கூழ்குடிக்கி நாணு"

"ஓஹோ, கீழக்கோடியில் குருக்கள் வீட்டுக்கு எதிர்த்த வீட்டில் இருந்தாரே அந்த நாணுவா?"

"ஆமாம்"

"அப்படியானால் நீங்கள் ரொம்பப் பக்கத்தில்தான் வந்துவிட்டேள். சுற்றி வளைத்துப் பார்த்தால் உறவாகக் கூட இருப்பேள்" என்று சொல்லிவிட்டு என் தகப்பனார் 'அடியே, அடியே' என்று என் தாயாரைக் கூப்பிடுவார். என் தாயார் அடுப்பங்கரையிலே வேலை செய்துகொண்டிருக்கிறவர் கரண்டியும் கையுமாக ஓடோடியும் வருவார்.

"என்ன சமாசாரம்? எதற்காகக் கூப்பிட்டேள்?"

என் தகப்பனார் விருந்தாளியுடன் வந்தவரைக் குறிப்பிட்டு, "இவர் யார் தெரியுமோன்னோ? யாரோன்னு நினைச்சோமே....நம்ப விஷ்ணம்பேட்டை கூழ் குடிக்கி நாணுவய்யர் பேரன்டீ இவர்" என்று சொல்லுவார்.

"ஆமாம், பிள்ளை வயிற்றுப் பேரளு, பெண் வயிற்றுப் பேரளு?"

"பெண் வயிற்றுப் பேரன்"

"அப்படீன்ன சேஷிப் பெண் தைலம்மாவை உங்களுக்குக் கொடுத்திருக்கிறது என்று சொல்லுங்கள்."

ஆமாம் என்று தலையை ஆட்டுவார் விருந்தாளியுடன் வந்தவர்.

"அப்படீன்ன நீங்கள் எங்களுக்கு உறவான்ன வந்து சேர்ந்துவிட்டேள். உங்கள் ஆம்படையாள் தைலம்மாளும், என் ஒன்றுவிட்ட சித்திப் பெண் செல்லம்மாளும் ஒன்று விட்ட அத்தங்காள் அம்மாங்காள் ஆகணுமாக்கும்" என்று என் தாயார் சொல்லிவிட்டு மேலே, தைலம்மாள் செளக்கிய மாய் இருக்கிருளா, அவளுக்குக் குழந்தைகள் எத்தனை, இப்போது ஸ்நானம் பண்ணிக் கொண்டிருக்கிருளா, இல்லையா என்றெல்லாம் கேள்விகளை அடுக்கிக்கொண்டே போவாள்.

விருந்தாளியுடன் வந்தவர் "ஐயோ, நுழையா வீட்டுக்கு அழையா விருந்தாக வந்தோமே" என்று முதலில் நினைத் திருந்தாலும் பின்னல் அப்படி வந்ததைக் குறித்துச் சந்தோஷமே படுவார். அன்று விருந்தாளியைவிட அவருக்குத்தான் உபசாரம் பலமாக நடக்கும். ஏனெனில் விருந்தாளியோ எப்பவும் வருகிறவர். விருந்தாளியுடன் வந்தவரோ அன்றுதான் முதல் முதலாக வீட்டுக்கு வந்தவர்.

இங்கே அப்பா விருந்தாளிகளுடன் பேசிக்கொண் டிருப்பதற்குள், உள்ளே, சமயலறையில் பலமாக விருந்து தயாராகிவிடும். இரண்டுபேரை எதிர்பார்த்துச் சமைத்த சமையல் நான்கு பேருக்கும் கண்டு மிஞ்சவும் செய்யும். விருந்தாளியுடன் வந்தவரை வெகுநாள் தெரிந்தவர்போல் என் தகப்பனர் "இந்தாடி, அவாளுக்கு வெங்காய சாம்பார் என்ருல் ருசி. இன்னும் நான்கு கரண்டி ஊற்று" என்பார். வெங்காய சாம்பார் என்ருல் யாருக்குத்தான் பிடிக்காது?

அதனால்தான் என் தகப்பனார் அப்படிச் சொல்லி வைப்பார் என்று நினைக்கிறேன்.

"உருளைக்கிழங்கு கறியும் வெங்காய சாம்பாரும் பலே பேஷ். பலேபேஷ்" என்று விருந்தாளிகள் சாப்பிடுவார்கள். உருளைக்கிழங்கு கறி அத்தனை நேர்த்தியாக அமைந்ததைப் பற்றி எனக்குக்கூட ஆச்சரியமாக இருக்கும். ஏனெனில் என் தாயாருக்கு உருளைக் கிழங்குக் கறி அவ்வளவு நன்றாகச் செய்யத் தெரியாது. இதைவிட ஆச்சரியம் அளிக்கும் விஷயம் என் தாயார் உருளைக் கிழங்கு கறி எப்படிப் பண்ணினாள் என்பதுதான். ஏனெனில் வீட்டில் உருளைக் கிழங்கு கிடையாது. மார்க்கெட்டுக்குப் போய் கறிகாய்கள் வாங்கிக்கொண்டு வருவது நானானதால் என்னென்ன கறிகாய் வீட்டில் இருக்கின்றன என்று எனக்குத் தெரியும். ஆ........தேங்காய்த் தொகையல் பலே பேஷாய் இருக்கிறதே. பிட்லே அதைவிட கனஜோராக இருக்கிறதே........பிட்லேக்கு ஏது பாகற்காய்? நாம் வாங்கிக்கொண்டு வரவில்லையே ?

இப்படி நான் மண்டையை உடைத்துக் கொண் டிருக்கிற சமயத்தில் பக்கத்து வீட்டு அம்மாள் 'அம்மாமி உங்களைத்தானே' என்று என் தாயாரை டெலிபோனில் கூப்பிடுகிற சப்தம் காதில் விழும். அந்தக் காலத்தில் வீட்டுக்கு வீடு இருந்த சாலப்பிறைகள்தான் நான் குறிப் பிடும் டெலிபோன்........'ஆ அப்படியா சமசாரம். பாகற் காய் பிட்லேயும் உருளைக் கிழங்குக் கறியும் பக்கத்து வீட்டிலிருந்து வந்தவை. அப்படிச் சொல்லு' என்று மனதில் நினைத்துக் கொள்வேன்.

அந்தக் காலத்தில் இந்த சாலப்பிறைகள் இத்தகைய காரியங்களுக்கு மிகவும் உதவின. இரண்டு பேரை எதிர் பார்த்த இடத்தில் நான்கு பேர்கள் வந்துவிட்டார்கள் என்றால் அம்மா உடனே இரண்டு பக்கத்து வீடுகளுக்கும் டெலிபோன் செய்துவிடுவாள். கொஞ்ச நாழிக்கெல்லாம் இரண்டு வீடுகளிலிருந்தும் சாதம், சாம்பார் துகையல்,

ஊறுகாய் என்று இப்படி வந்து குவிந்துவிடும். எல்லாம் காதும் காதும் வைத்தாற்போல் நடந்துவிடும். கூடத்தில் விருந்தாளிகளுடன் பேசிக்கொண்டிருக்கும் புருஷர்கள் இது குறித்துக் கவலைப்பட வேண்டியிருக்காது.

ஆகவே அந்தக் காலத்தில் விருந்தாளிகளுடன் வந்தவர்களைப் பார்த்து, நாம் 'வந்துவிட்டாரா' என்று கவலைப் படுவது கிடையாது. அதற்குப் பதில் இவரை அழைத்துக் கொண்டு வந்த விருந்தாளியைப் பார்த்து, 'நல்ல வேளை இவாளை அழைச்சுண்டு வந்தேளே! இல்லாவிடில் இவாளை எங்கே சந்திக்கப்போகிறோம்' என்று அவரைப் பாராட்டுவோம்.

ஆனால் இதெல்லாம் பழங்காலம். 'இஷ்டமித்திர பந்து ஜனங்களுடன் நாலுநாள் முன்னதாகவே வந்திருந்து' என்று கல்யாணப் பத்திரிகை போட்ட காலம். ஆனால் இப்போது நாம் இருக்கும் காலமோ, டிராயா டிக்கட் மாதிரி, 'டின்னர் கார்டு வைத்து அனுப்பும் காலம். 'நீ சாப்பிட வரப்போகிறாயா, இல்லையா? எனக்குத் திட்டமாக இத்தனை பேர்தான் சாப்பிட வருகிறார்கள் என்று தெரியவேண்டும்' என்று கேட்பதுபோல் 'ஆர். எஸ். வி. பி' என்று எழுதி யனுப்பும் காலம். ஆகவே இந்தக் காலத்தில் விருந்தாளி யாரையாவது கூட அழைத்துக்கொண்டு வந்துவிட்டால், 'ஐயோ அழைத்துக்கொண்டு வந்துவிட்டானே' என்று தான் நினைக்கத் தோன்றுகிறது.

இந்த காலத்தில் விருந்துக்கு யாரையாவது அழைப் பதற்கே முதலில் நம் மனைவியைப் 'பெர்மிஷன்' கேட்க வேண்டியிருக்கிறது. முன்னைப்போல், வீட்டுக்காரியைக் கேட்காமல், 'டேய், நாளைக்கு நம் வீட்டுக்குச் சாப்பிட வாடா' என்று சுவாதீனமாகக் கூப்பிட முடிகிறதில்லை. அப்படித்தான் 'பெர்மிஷன்' வாங்கி, விருந்தாளியை அழைத்துக்கொண்டு வருகிறோம். மனைவியால் சமைத்துப் போட முடிகிறதா? இல்லை. சாதாரண நாட்களில் நம் ஒருவருக்கே சமைத்துப் போடத் திண்டாடும் அவளுக்கு,

விருந்து வந்திருக்கிறது என்றதுமே முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க ஆரம்பிக்கிறது. விருந்தாளிக்கே இப்படியென்றால் நாம் எதிர் பாராமல் விருந்தாளி தம்முடன்கூட ஒருவரை அழைத்துக்கொண்டு வந்துவிட்டார் என்றால் கேட்கவா வேண்டும்?

இந்த விருந்தாளியுடன் வந்தவரால் எத்தனையோ குடும்பங்களில் தம்பதிக்கிடையில் பூசலும், மனக்கசப்பும் ஏற்பட்டு விடுகிறது. இது விஷயத்தை நான் என் கண் கூடாகப் பார்த்திருக்கிறேன்.

என் நண்பர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களுடைய நச்சரிப்பால் நானும் சில சமயங்களில் இந்த விருந்தாளியின் கூட வந்தவராக ஆகியிருக்கிறேன். "டேய், நான் வல்லேடா. வீணாக என்னைத் தொந்தரவு படுத்தாதேங்கடா" என்று கதறியிருக்கிறேன். ஆனால் அவர்கள் கேட்க மாட்டார்கள். இதனால் ஏற்பட்ட பலன் என்னவென்றால் நான் விருந்துக்குப் போன இடத்தில் வீட்டு அம்மாள், எனக்குத் தடியன் என்று பட்டம் கொடுத்ததுதான். "ஊரில் இருக்கும் தடியன்களுக்கெல்லாம் சமைத்துப் போடுவது தானா என் வேலை" என்று அந்த அம்மாள் தன் புருஷனை எங்கள் காதில் விழும்படி கேட்டாள். அதிலிருந்து நண்பர்கள் என்ன நச்சரித்தாலும் சரி, அவர்கள் விருந்தாளிகளாகப் போகும் இடத்திற்குக் கூடப் போவதில்லை என்று தீர்மானித்துவிட்டேன்.

நம் வீட்டுக்கு வரும் விருந்தாளி யாரையாவது தம்கூட அழைத்துக் கொண்டு வருகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். முதலில் இந்தக் கூடவந்தவர் யார் என்பதே நமக்குத் தெரிவதில்லை. அவர் தாம் இன்னார் என்று தெரிவித்துக் கொண்டாலும், பழங்காலத்தைப் போல, அவருக்கும் இன்னொருவருக்கும், முடிச்சுப் போட்டு, 'தாங்கள் இன்னாரா' என்று கேட்கத் தெரிவதில்லை.

அதோடுகூட யாரைக் கண்டாலும் அவர்களுடன் கலகலவென்று பேசும் வழக்கம் குறைந்து வருகிறது. அதனால்

புதிதாக வந்தவருடன் நமக்குப் பேசப் பிடிக்கவில்லை. சிவ பூசையில் கரடி யாட்டம் வந்து சேர்ந்து விட்டானே என்று தான் நினைக்கத் தோன்றுகிறது. விருந்துக்கு அழைத் திருக்கும் நண்பருடன் எத்தனையோ அந்தரங்க விஷயங்கள் பேசவேண்டும் என்று ஆவலாக இருக்கிறோம். ஆனால்கூட இன்னொருவர், நமக்குத் தெரியாதவர் இருப்பதால் பேச சங்கோஜப் படுகிறோம். ஏதோ காமா சோமா என்று உப்பு சப்பற்ற விஷயங்களைத் தான் பேச வேண்டியிருக்கிறது.

இப்படி பேசிக் கொண்டிருக்கும் போது இன்னொரு விஷயம் நம் மனதை வாட்டிக் கொண்டேயிருக்கிறது. "ஐயோ ஒரு விருந்தாளிக்குத்தானே சமைக்கச் சொன் னோம். இரண்டு பேர் வந்திருக்கிறார்களே. அவள் என்ன பண்ணப் போகிறாளோ" என்று நம் மனைவியைப் பற்றிக் கவலைப் படத் தொடங்குகிறோம்.

ஆனால் தன்னைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண் டிருக்கிறானே என்று இந்த மனைவிக்கு ஏதாவது தெரிந்தால் தானே? நொந்த மாட்டை புண்ணில் குத்துவது போல் அந்த சமயம் பார்த்துத்தான் நம் மனைவி நம்மைக் கூப்பிடுகிறாள். அதாவது கதவிடுக்கில் நின்று கொண்டு கைவளையல்களை ஓசை செய்கிறாள். 'இதோ வந்துவிட் டேன்' என்று வந்திருப்பவர்களிடம் சொல்லி விட்டு நாம் உள்ளே போகிறோம். உள்ளே போனதும் எரித்து விடு பவள் போல் நம் மனைவி நம்மைப் பார்க்கிறாள். விருந்தாளி நம்முடன் கூட இன்னொருவரை அழைத்துக் கொண்டு வந்ததற்கு புருஷன் என்ன பண்ணுவான் என்ற யோசனை கிடையாது அவளுக்கு. முன் போல வீட்டுக்கு வீடு சாலப்பிறை இருக்கிறதா, என்ன, மனைவி உடனே டெலிபோன் பண்ணிச் சாமான்கள் வரவழைப்பதற்கு?

"திடும்னு அவர் மற்றொருவரையும் கூட்டிக் கொண்டு வந்து நிற்கிறாரே? உங்கள் இரண்டு பேருக்குத்தான் சமைத்திருக்கிறேன்" என்கிறாள் மனைவி.

"எப்படியோ இருக்கிறதை வச்சிண்டு ஒப்பேத்தேன்"

"எப்படி ஒப்பேத்தறது? முதலில் இலை கிடையாது. தயிரும் போதுமோ போதாதோ என்றுதானிருக்கிறது. தயிரை விளாவலாமென்றால் எலுமிச்சம் பழம் கிடையாது. நீங்கள் உடனே போய் தயிரும் இலையும் வாங்கிக்கொண்டு வாருங்கள். அதற்குள் நான் உலையில் கொஞ்சம் அரிசி களைந்து போடுகிறேன்" என்கிறாள்.

இந்த சாமான்களை வாங்கிக்கொண்டு வருவதற்கு நாம் தான் போயாகவேண்டும். கூடத்தில் விருந்தாளிகளை உட்கார வைத்துவிட்டு, அவர்களுக்குத் தெரியாமல் கொல்லை வழியாகப் போனால் நன்றாயிருக்குமா? ஆகவே கையில் ஈயச் செம்பையும் மணிபர்ஸையும் எடுத்துக்கொண்டு அசடு வழிய அவர்களைப் பார்த்து ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்து விட்டுக் கடைக்குப் போகவேண்டியதுதான்.

இரண்டும் கட்டான் வேளையில் போனால் தயிர் எங்கே அகப்படப்போகிறது? ஆகவே இலையையும் எலுமிச்சம் பழத்தையும் வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்கிறோம். நம் மனைவி மோரில் தண்ணீரைக் கொட்டி எலுமிச்சம் பழத்தைப் பிழிவாள். "இந்தாருங்கோ, எல்லாம் கொஞ்சமாகத்தான் பண்ணியிருக்கு. இரண்டாம் தடவை ஒன்றும் கேக்காதேங்கோ" என்று முன்னாலேயே எச்சரித்துவிடுவாள்.

கலத்தில் எங்களுக்கு அவள் பரிமாறுகிற தினுசே நாங்கள் விருந்துக்கு அழைத்திருந்த நபரை இடித்துக் காட்டுவது போலிருக்கும்.

"இந்தா, கூட இன்னொருவரை அழைத்துக்கொண்டு வந்தாயல்லவா? அதனால் இந்த சுண்டைக்காயத்தனை கறிகாய்தான் கிடைக்கும். உத்தரணி கூட்டு தான் கிடைக்கும். ஒரு கரண்டி சாம்பாருக்குமேல் மூச்சு விடக் கூடாது. தண்ணி மோர்தான் கிடைக்கும். ஏன் இன்னொருவரைக் கூட அழைத்துக்கொண்டு வந்தாய்?" என்று ஒவ்வொரு தடவையும் இடித்துக் காட்டுவது போலிருக்கும்.

பாவம், சாப்பிடவந்த விருந்தாளிக்கும் விருந்தாளியுடன் வந்தவருக்கும் ஏண்டா இங்கே வந்தோம் என்று ஆகிவிடும். நம் நண்பருக்கும் நம்மைப்பற்றித் தவறுதலான அபிப்பிராயம் ஏற்படும். 'பயல் முன்னைப்போல் இல்லை. நம்மைக் கண்டால் பிடிப்பதில்லை. இனிமேல் அவன் முகத்தில் விழிக்கக்கூடாது' என்று நண்பர் தீர்மானித்துக்கொள்வார்.

ஆனல் என்ன பண்ணலாம்? முன்னைப்போல் எல்லாரும் பெருங்குடித்தனமாக வாழ்ந்தால் விருந்தாளிகள் தங்களுடன் எத்தனை பேரைக் கூட்டிக் கொண்டு வந்தாலும் நாம் சங்கடப் படத் தேவையில்லை. ஆனல் இந்தக் காலத்தில் எங்கு பார்த்தாலும் ஆம்படையான்–பெண்டாட்டி குடித்தனங்கள்தான் அதிகமாகக் காணப் படுகின்றது. பழையது சாப்பிடும் வழக்கமோ போய் விட்டது. ஆகவே எங்கும் தராசில் வைத்து நிறுத்தது போலத்தான் சமைக்கிறார்கள். முன்னைப்போல வீட்டுக்கு வீடு சாலப்பிறைகளும் கிடையாது.

இருந்தாலும் பிரயோசனப் படாது. ஏனெனில் சினிமாவுக்குப் போவதற்கோ அல்லது 'ஷாப்பிங்' போவதற்கோ ஸ்திரீகள் ஒத்துப் போகிறார்களே யொழிய இதுமாதிரி சமையல், பதார்த்தங்கள் ஒருவருக்கொருவர் கொடுத்து உதவிக் கொள்வதில்லை.

ஸ்திரீகள் இப்படியென்றால் புருஷர்களும் அப்படித் தான் இருக்கிறார்கள். தங்கள் தங்கள் ஆபீசும், ஆபீஸ் சிநேகிதர்களும்தான் அவர்களுக்குத் தெரியுமேயொழிய ஊர் விஷயங்களோ, ஒருவர்க் கொருவர் உள்ள உறவு விஷயங்களோ ஒன்றுமே தெரியாது. புதிதாக யாராவது வந்தால் அவர்களுடன் கலகலப்பாகப் பேசத் தெரியாது.

ஆகவே நிலைமை இப்படியிருக்கும் வரை விருந்தாளியுடன் வந்தவரைப் பார்த்து "வந்துவிட்டாரா, ஐயோ, வந்துவிட்டாரா!" என்றே அங்கலாய்க்கத் தோன்றுகிறது.

சில மாதங்களுக்கு முன்பு மத்திய சட்ட சபையில் ஒரு அங்கத்தினர் ஒரு புகார் செய்தார். நண்பர் ஒருவருக்குத் தாம் பழக்கூடை அனுப்பியதாகவும், நண்பர் அதைத் திறந்து பார்த்தபொழுது கூடை நிறையப் பழங்களுக்குப் பதில் கூழாங்கற்கள் இருந்தனவென்றும் சொன்னார். இன்னொரு சமயம் இன்னொரு நண்பருக்கு அனுப்பிய பழக்கூடையில் ஒரே செங்கல்கள் காணப்பட்டன வென்றும் சொன்னார். ரயில்வே அதிகாரிகள் போதுமான சிரத்தை எடுத்துக் கொள்ளாததனால் தான் இத்தகைய திருட்டுக்கள் ஏற்படுகின்றனவென்று அந்த அங்கத்தினர் குறை கூறினார்.

என்னைக் கேட்டால் இத்தகைய திருட்டுக்களுக்கு காரணம் ரயில்வே அதிகாரிகளின் சிரத்தைக் குறைவு அல்லவென்று திடமாய்க் கூறுவேன். பழத்தைத் திருடிய திருடர்கள் பழக்கூடையைத் திருடாமல் விட்டதிலிருந்தே யார் காரணம் என்று தெரியவில்லையா? பொழுது விடிந்து பொழுது அஸ்தமித்தால் ஓயாமல் "பழங்கள் நிறையச் சாப்பிடுங்கள்" "பழங்கள் நிறையச் சாப்பிடுங்கள்" என்று பிரசாரம் செய்து வருகின்றார்களே அவர்கள்தான் இக்குற்றங்களுக்குப் பொறுப்பாளி. அவர்கள் பிரசாரங்களின் பயனாகத்தான் இப் பழத் திருடர்கள் இந்த வகையில் பழம் சாப்பிட ஆரம்பித்திருக்கிறார்கள்.

பதிலுக்கு ஏதாவது வைக்கவேண்டும் என்று இத் திருடர்கள் ஒரு நியதி வைத்திருக்கிறார்களே அதற்காக அவர்களை மெச்சத்தான் வேண்டும். ஒரு சமயம் செங்கலையும் இன்னொரு சமயம் கூழாங்கற்களையும் வைத்ததிலிருந்தே அவர்கள் தங்கள் கையில் எது கிடைத்ததோ அதை வைத்திருக்கிறார்கள் எனப்படுகிறது. பழங்கள் நிறையச் சாப்பிட வேண்டும், தங்கள் உடம்பிலுள்ள வைட்டமின் அளவைச் சரிப்படுத்திக் கொள்ளவேண்டுமென்ற ஆசை

யில் அவர்கள் தங்கள் கையில் வைரம் அகப்பட்டிருந்தாலும் கட்டாயம் வைத்திருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

கனம் அங்கத்தினர் மற்ற நண்பர்களுக்கு அனுப்பிய பழக்கூடையின் கதி என்னவாயிற்று என்று தெரிவிக்கவில்லை. பழங்கள் ஒவ்வொரு சமயமும் என்னென்ன புது உருவெடுத்துக் கொண்டன என்று தெரிந்துகொள்ள எல்லோருக்குமே ஆவலாக இருக்கும்.

ஒருவருக்குக் கூழாங்கற்கள் கிடைக்கலாம். இன்னொருவருக்குச் செங்கல் கிடைக்கலாம். மற்றொருவருக்கு மணல் கிடைக்கலாம். நம் நண்பர்கள் எதற்குக் கொடுத்து வைத்தவர்கள் என்று நாம் இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். நாம் நண்பர்களுக்குப் பழம்தான் அனுப்பி வைக்கலாமே ஒழிய அது அவர்களுக்குப் போய்ச் சேருவதற்குள் என்ன உரு எடுத்துக் கொள்கிறது என்பது அவர்கள் அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது.

பழத்திருடர்களின் மீது எனக்கு ஒரே ஒரு வருத்தம் தான் உண்டு. கூடையில் நமக்கு நண்பர்கள் என்ன பழம் அனுப்பி வைத்திருந்தார்கள் என்று அறிந்துகொள்ள அவர்கள் யாதொரு அறிகுறியும் வைப்பதில்லை. நமக்குக் கூடையில் வந்தது சாத்துக்குடியா அல்லது ஆப்பிளா அல்லது மாம்பழமாவென்று தெரிந்துகொள்ளமுடிவதில்லை.

என்னைக் கேட்டால் இந்தத் திருடர்கள் எல்லாம் ஒரு மகாநாடு உடனேயே கூட்டவேண்டும். இன்ன பழத்துக்கு இன்ன சாமான்தான் பர்த்தியாக வைக்கவேண்டும், அதாவது ஆப்பிளுக்குப் பதில் கூழாங்கல், மாம்பழத்திற்குப் பதில் மணல், சாத்துக்குடிக்குப் பதில் செங்கல், என்று இதுமாதிரி ஏதாவது ஓர் நியதி வைத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுது கூடையிலுள்ள சாமானைக் கொண்டு நம் நண்பர்கள் நமக்கு என்ன பழம் அனுப்பியிருந்தார்கள் என்று நாம் தெரிந்து கொள்ளலாம்.

பழங்களைத் திருடுவது மட்டுமின்றி பழக்கூடையையும் திருடுவதென்று சில திருடர்கள் வைத்திருக்கிறார்கள். இவர்களைக் கண்டால்தான் எனக்கு கட்டோடு பிடிப்ப தில்லை. பார்க்கப் போனால் நம் நாட்டுப் பழக்கூடைகள் அப்படி ஒன்றும் ஆசைப்பட்டு வைத்துக் கொள்ளக்கூடிய பொருள்கள் அல்ல. கூழாங்கல்லுக்கும், மண்ணுக்குமோ நம் நாட்டில் பஞ்சமில்லை. அப்படியிருக்கும்பொழுது இத் திருடர்கள் கூடையில் கூழாங்கற்களைப்போட்டு அனுப்பி வைப்பதற்கென்ன கேட்கிறேன். நண்பர்கள் ஏதோ பழம் அனுப்பிவைத்திருக்கிறார்கள் என்ற விஷய மாவது கூடையைப் பெற்றுக்கொள்கிறவர்களுக்குத் தெரியு மல்லவா?

இதில் இன்னொரு தர்மசங்கடமுமிருக்கிறது. குறும்புக் கார நண்பர்கள் வேண்டுமென்றே கூடை நிறைய கூழாங் கல்லை நமக்கு அனுப்பிவைத்து அந்தப் பழியை பழத் திருடர்கள் மீது சுமத்தலாம். ஆகவே, இதையெல்லாம் பார்க்கும்பொழுது பழம் வேண்டுபவர்கள் நண்பர்களை நம்பிப் பிரயோஜனமில்லை. அவரவர்களுக்கு வேண்டிய பழங்களை அவரவர்கள் உள்ளூரிலேயே வாங்கிக் கொள்வது தான் சிறந்தது.

சரசு பண்ணிக் கொடுத்த டிபன் வழக்கம் போல் வாயில் வைக்க வழங்காமல் போகவே, பக்கத்து ஹோட்ட லுக்குப் போய் டிபன் வாங்கிச் சாப்பிட்டுவிட்டு வரலாம் என்று கிளம்பினேன். பக்கத்தில் இருந்த பஸ் டர்மின ஸில் காத்துக் கொண்டிருந்த பஸ்ஸில் ஏறினேன். ஏறின கொஞ்ச நாழிக் கெல்லாம் பஸ் கண்டக்டர் எல்லாரையும் கீழே இறங்கச் சொன்னன்.

இந்தக் காலத்துப் பஸ் கண்டக்டர்கள் இரண்டே இரண்டு காரணங்களுக்காகத்தான் எல்லாரையும் பஸ்ஸை விட்டு இறங்கச் சொல்லுவார்கள். ஒன்று பெட்ரோல் பிடிப்பதற்காக. இன்னொன்று பஸ்ஸைத் தள்ளு வதற்காக.

பக்கத்தில் பெட்ரோல் பங்க் ஒன்றும் இல்லாமற் போகவே, பஸ்ஸைத் தள்ளச் சொல்லுகிறானக்கும் என்று நினைத்து, குடு குடு என்று கீழே இறங்கி, பஸ்ஸைத் தள்ளத் தொடங்கினேன். எப்படியாவது பஸ் சீக்கிரம் ஹோட்டல் போய்ச் சேர்ந்தால் நல்லது என்று எனக்கு.

நான் பஸ்ஸைத் தள்ளுவதைப் பார்த்து விட்டு, கண்டக்டர், "ஏன் ஸார், பஸ்ஸைத் தள்ளுறீங்க?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

"ஏனப்பா! அதற்காகத்தானே நீ எல்லாரையும் பஸ்ஸை விட்டு இறங்கச் சொன்னாய்?" என்றேன்.

"சரியாகப் போச்சு! பஸ் டிரைவர்கள் எல்லாம் வேலை நிறுத்தம் செய்து விட்டார்கள். அதற்காக அல்லவோ இறங்கச் சொன்னேன்" என்றான்.

சரி, ரிக்ஷாவிலாவது ஏறி ஹோட்டலுக்குச் செல் வோம் என்று நினைத்து, தெருவில் போய்க் கொண்டிருந்த ரிக்ஷாவைக் கூப்பிட்டேன். ரிக்ஷாக்காரனும் வேலை நிறுத்தம் செய்து விட்டானும்! சரி, நடந்து தொலைப் பதைத் தவிர வேறு வழியில்லை யென்று ஹோட்டலுக்கு நடந்து தொலைத்தேன். ஆனல் ஹோட்டலுக்குப் போனல் அங்கேயும் வேலை நிறுத்தம்!

எனக்கா ஆத்திரம் தாங்கவில்லை. இந்த வேலை நிறுத்தம் என்னும் யுக்தியைக் கண்டு பிடித்த மகானுபாவனைக் கண்டு, இந்தக் கன்னத்தில் நான்கு, அந்தக் கன்னத்தில் நான்கு என்று கொடுக்கவேண்டும் போல் பட்டது.

ஆனால் இந்த வேலை நிறுத்தம் என்னும் யுக்தியைக் கண்டு பிடித்தது யார்?

முதலாளிகளா, அல்லது தொழிலாளிகளா, அல்லது இரண்டு பேருக்கு மிடையில் உள்ள பூசலை உபயோகப் படுத்திக்கொண்டு பிராபல்யமடைய விரும்பும் தொழிலாளர் தலைவர்களா? ஆனால் இந்தப் பொல்லாத ஆயுதத்தைக் கண்டு பிடிக்கக் கூடிய சாமர்த்தியம் இந்த மூன்று பேருக்கும் கிடையாது என்பது என் அபிப்பிராயம். ஆகவே இந்த வேலை நிறுத்தங்களுக்கே மூலகாரணம் வேறு யாராவது தான் இருக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டே வீடு திரும்பினேன்.

வீடு திரும்பினால் வீட்டில் சரசு வேலை நிறுத்தம் செய்து கொண்டிருந்தாள்!

சரசு வேலை நிறுத்தம் செய்வதே ஒரு தனி, அலாதி முறையில். சாதாரணமாக, ஸ்திரீகள் வேலை நிறுத்தம் செய்வதென்றால், முகத்தை முந்தானையால் மூடிக்கொண்டு மூலையில் படுத்துக் கொண்டு விடுவார்கள். ஆனால் சரசு வேலை நிறுத்தம் செய்வதென்றால் அவளுக்கு அத்தனைக் கத்தனை வேலை அதிகம். பாத்திரங்களை அனாவசியமாக டக்கு, டக்கென்று கீழே வைக்கவேண்டுமானாலும், அல்லது, மேஜை, நாற்காலி முதலியவற்றைத் தொப்பு, தொப் பென்று தூக்கிக் கீழே போடவேண்டுமானாலும், உடம்பை வளைத்து வேலை செய்து தானே ஆகவேண்டும்?

இந்த சரசுவே இப்படித்தான். அவள் டிபனைக் குறை கூறி விட்டு, நான் வெளியே சென்று விட்டுத் திரும்பும் ஒவ்வொரு தடவையும் இப்படித்தான் வேலை நிறுத்தம் செய்கிறேன் பிரம்மாவே என்று மேஜை நாற்காலிகளை

உடைக்க ஆரம்பித்து விடுவாள். என்ன பண்ணலாம்! சத்திய அரிச்சந்திரன் பிறந்த இந்த நாட்டில் உண்மை சொன்னதற்காக இத்தனை விபரீதம்? சரசுவின் சமையலைப் பற்றியும், அவள் குணதிசயங்களைப் பற்றியும் எனக்குப் பட்ட உண்மையைச் சொன்னதற்காக இந்தப் பலன்!

ஆனல் பார்க்கப் போனல் எந்த ஸ்திரீதான் உண்மையைச் சொன்னல் வேலை நிறுத்தம் செய்யாமலிருக்கிருள்! இந்த ஸ்திரீகளே இப்படித்தானே? எதற்கெடுத்தாலும் வேலை நிறுத்தம். ராமனைக் காட்டுக்கு அனுப்பவேண்டுமா? வேலை நிறுத்தம் செய். பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைக்கவேண்டுமா? வேலை நிறுத்தம் செய். புடவை வேண்டுமா? வேலை நிறுத்தம் செய். பிறந்த வீட்டுக்குப் போக வேண்டுமா? வேலை நிறுத்தம் செய். இன்னும்........அட ஈச்வரா? இத்தனை நாழி தோளில் ஆட்டைப் போட்டுக் கொண்டு எங்கெங்கேயோ தேடியிருக்கிறேனே? வேலை நிறுத்தத்துக் கெல்லாம் மூல காரணம் இந்த ஸ்திரீகள் அல்லவோ? இவர்கள் எதற்கெடுத்தாலும் வேலை நிறுத்தம் செய்வதைப் பார்த்துக் கொண்டல்லவா, இன்று புருஷர்களும் வேலை நிறுத்தம் செய்யத் தொடங்கி விட்டார்கள்?

ஆனல் ஒன்று. முள்ளை முள்ளால் எடுக்கலாம் என்பது போல், ஸ்திரீகள் ஆரம்பித்த வேலை நிறுத்தம் என்னும் யுக்தியை இவர்களைக் கொண்டே நிறுத்தச் சொல்லலாம்.

உலகெங்கணும் உணவுப் பஞ்சம் தாண்டவமாடிக் கொண்டிருக்கும் இந்த சமயத்தில், உலகத்தின் எந்த பாகத்தில் யார் வேலை நிறுத்தம் செய்தாலும் அது எல்லாரையும், வேலை நிறுத்தம் செய்கிறவர்கள் உள்பட, பாதிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் இது விஷயத்தை அவர்கள் மனதில் தைக்கும்படி யார் எடுத்துச் சொல்வது?

இந்த ஸ்திரீகளைத் தவிர வேறுயார் எடுத்துச் சொல்ல முடியும்? அதுவும் அவர்கள் தங்கள் பாஷையிலேயே சொன்னால்தான் இந்தப் புருஷர்களுக்குப் புரியும்.

ஆகவேதான் நான் உலகத்து ஸ்திரீகளை யெல்லாம் உடனேயே வேலை நிறுத்தம் செய்யும்படி கேட்டுக் கொள்ளப் போகிறேன். அவர்கள் வேலை நிறுத்தம் செய்தால் வீடு எவ்வளவு திண்டாடிப் போகும் என்பதைக் கண்ணால் கண்டால்தான் தாங்கள் வேலை நிறுத்தம் செய்தால் உலகம் எவ்வளவு திண்டாடிப் போகும் என்பதை இத்தொழிலாளர்கள் உணர்வார்கள்.

ஆகவே, உலகத்து தொழிலாளிகளே! (தொழிலாளர்கள் அல்ல, தொழிலாளிகள். தொழிலாளி என்பதில் பெண்பால் தொக்கியிருப்பதைக் கவனிக்க!) ஒன்று சேருங்கள். அவரவர்கள் கையில் இருக்கும் ஆப்பை, வெண்கலப் பானை, ஊதுகுழாய் முதலிய கருவிகளைக் கீழே போட்டு விட்டு வேலை நிறுத்தம் செய்யுங்கள்!

அம்மா சரசு! தாங்களும் வேலை நிறுத்தம் செய்ய ஆரம்பியுங்கள்! தங்கள் வழக்கம் போல் மேஜை, நாற்காலி, கதவு முதலியவற்றை உடைக்க ஆரம்பியுங்கள்.

நான் கல்கத்தாவுக்குப் போகப் போகிறேன் என்று தெரிந்ததும், என் எழுத்தாள நண்பர் ஒருவர் என்னை மிகவும் பரிதாபமாகப் பார்த்தார்.

"ஏன் ஸார்! கல்கத்தாவுக்குப் போகாமல் இருப்பதற்கு ஒரு வழியும் இல்லையா?" என்று கேட்டார்.

"நான் கல்கத்தாவுக்குப் போகவில்லையோ, காவி வஸ்திரம் கட்டிக்கொண்டு காசிக்குப் போகவேண்டியது தான்" என்றேன்.

நண்பருக்கு ஒன்றும் விளங்கவில்லை. கல்கத்தாவாவது, காவி வஸ்திரமாவது, காசியாவது என்று திகைத்தார். நான் விஷயத்தை விளக்கினேன்.

"இதோ பாருங்கள். என் மாமனர் கல்கத்தாவில் இருக்கிறார். கட்டாயம் கல்கத்தாவுக்குத் தன்னை அழைத்துக் கொண்டு போனல் தானச்சு என்று என் மனைவி பிடிவாதம் பிடிக்கிறாள். மறுத்தேனே, கிரகஸ்தாச்சிரமத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டியதுதான். அதனல் தான் காவி வஸ்திரம் கட்டிக்கொண்டு காசிப் போகவேண்டும் என்றேன்."

"அப்படி காசிக்குப் போனலும் கல்கத்தா வழியாய்ப் போகாதீர்கள் ஐயா" என்று நண்பர் திரும்பவும் எச்சரித்தார்.

ஆனல் அவர் எச்சரிக்கையை நான் பொருட்படுத்த மாட்டேன் என்று பட்டதும் நண்பர் ஒன்று சொல்லி வைத்தார்.

"இதோ பாருங்கள், நான் என்ன சொன்னலும் நீங்கள் கேட்கமாட்டீர்கள் போல் தெரிகிறது. என்ன பண்ணலாம், பெண்டாட்டியைக் கண்டு அத்தனை நடுங்குகிறீர். அப்படியானலும் ஒன்று சொல்லுகிறேன். அதையாவது கேளும். கல்கத்தாவில் நீர் ஒரு தமிழன், அதிலும் ஒரு எழுத்தாளன் என்று காட்டிக் கொள்ளாதேயும். காட்டிக் கொண்டீரோ, வந்தது ஆபத்து! இப்போதே

எச்சரிக்கை செய்துவிட்டேன். பின்னால் சங்கடத்தில் மாட்டிக்கொண்டு திண்டாடாதேயும்" என்றார்.

நண்பர் சொன்னபடியே நான் கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்ததும், யாருக்கும் நான் தமிழன் என்று தெரியக்கூடாது என்பதற்காக, வங்காளியைப் போல் வேஷம் போட ஆரம்பித்தேன். மூலக்கச்சமும், நீண்ட ஜிப்பாவும் அணிந்தேன். வங்காளி மொழியும் இரண்டு வார்த்தைகள் கற்று வைத்துக்கொண்டேன்.

வங்காளியில், நம் வீட்டுக்கு யாராவது வந்தால் உடனே அவர்களைப் பார்த்து, "ஆஷ-ன், போஷ-ன்" என்று சொல்வார்கள். "ஆஷ-ன், போஷ-ன்" என்றால் வங்காளியில், "வாருங்கள், உட்காருங்கள்" என்று அர்த்தம்.

நான் தமிழன் என்பதை மறைப்பதற்காக வந்தவர்கள் எல்லாரிடமும் முதலில், "ஆஷ-ன் போஷ-ன்" என்று சொல்லிவிட்டு, பின்னர் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தேன்.

நான் கல்கத்தா போன மறுநாளே கல்கத்தாத் தமிழர் ஒருவர் என்னைப் பார்ப்பதற்கு வந்து சேர்ந்தார்.

அவரைப் பார்த்ததும், "ஆஷ-ன், போஷ-ன்" என்றேன்.

"ஆஷ-ன், போஷ-னா! அப்படியானால் வருகிற ஞாயிற்றுக் கிழமையே வைத்துக்கொள்ளலாம்."

நம்மைத் தமிழர் என்று தெரிந்து கொண்டு விடப் போகிறாரே என்று திரும்பவும் "ஆஷ-ன், போஷ-ன்" என்றேன்.

"அப்படியானால் சம்மதந்தானே! எங்கே மாட்டேன் என்று சொல்லி விடப் போகிறீர்களோ என்று பயந்தேன்" என்று வந்தவர் பதில் அளித்ததும் நான் திகைத்து விட்டேன். என்னை யறியாமலேயே தமிழில் பேச ஆரம்பித்து விட்டேன்.

"என்னய்யா சம்மதம்? நான் எதற்குச் சம்மதம் அளித்தேன்?" என்று கேட்டேன்.

"எதற்குச் சம்மதமா? அதுதான் அடுத்த ஞாயிற்றுக் கிழமை போட்டிருக்கும் கூட்டத்தில் பேசுவதாக சம்மதம் தெரிவித்தீர்களே!" என்ருர்.

எனக்கு ஒன்றும் விளங்க வில்லை.

"ஐயா! தாங்கள் கூறுவது ஒன்றும் எனக்கு விளங்க வில்லை. தாங்கள் யார்? யாரைப் பார்க்க வந்தீர்கள்" என்று கேட்டேன்.

"நான் இங்குள்ள பாரதி தமிழ்சங்கத்தின் காரிய தரிசி. தங்களைத் தேடித்தான் வந்தேன். தங்களைத்தான் அடுத்த ஞாயிற்றுக் கிழமை கூட்டத்தில் பேசும்படி போட்டிருக்கிருேம்" என்று சொன்னுர்.

இதைக் கேட்டதும் என் எழுத்தாள நண்பரின் ஞாபகம் வந்தது. கல்கத்தாவுக்குப் போகாதே, கல்கத்தாவுக்குப் போகாதே என்று அவர் திரும்பத் திரும்ப வற்புறுத்திச் சொன்னதன் காரணம் அப்பொழுதுதான் விளங்கிற்று.

இந்த கல்கத்தாத் தமிழர்கள் இருக்கிருர்களே, மிகவும் பொல்லாதவர்கள். ஏதோ நாம் உண்டு, நம் உத்தியோகம் உண்டு என்று இருக்கிறவர்கள் அல்ல. ஊரைவிட்டு எதற்காக வந்தோம், பணம் சம்பாதிக்கத் தானே, அந்தக் காரியத்தைக் கவனிப்போம் என்று இருக்கிறவர்களும் அல்ல.

எல்லோருமாகச் சேர்ந்து கொண்டு பாரதி தமிழ்ச் சங்கம் என்று ஒன்று நடத்திவருகிருர்கள். இதில் வாரம் தவருமல் கூட்டம். ஒவ்வொரு கூட்டத்திலும் ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச்சு. பேச்சு என்ருல் யாராவது ஒருவர் பேசுவார், அல்லது இருவர் பேசுவார் என்பது கிடையாது. கிட்டத்தட்ட எல்லா அங்கத்தினர்களுமே பேச்சில் பங்கெடுத்துக் கொள்வார்கள்.

கடல் மடைதிறந்தாற் போல் பேசும் பாரதி தமிழ் சங்க அங்கத்தினர் ஒருவரோடு நான் தனித்துப் பேச நேர்ந்தது.

"எப்படி ஸார் இப்படிப் பேசக் கற்றுக் கொண்டீர்கள்? எனக்கு இப்படிப் பேச வரவில்லையே" என்றேன்.

"நான் கல்கத்தாவுக்கு வந்த புதிதில் ஒரு வார்த்தை கூடப் பேசத் தெரியாது. நாலு பேரைக் கண்டால் நாக்கு குழறும். இப்பொழுது என்னடா என்றால் நாலு பேரைப் பார்க்க வேண்டியது தான், உடனே என்னை யறியாமலேயே என் வாய் ஒரு பிரசங்கம் செய்து முடித்து விடுகிறது" என்றார்.

பாரதி தமிழ்ச் சங்கத்தின் கிட்டதட்ட எல்லா அங்கத்தினர்களுமே பேசுவதில் பலே கெட்டிக்காரர்களாய் இருக்கின்றனர்.

அதோடு ஒவ்வொருவரும் ஒரு விஷயத்தில் நிபுணர்களாக விளங்குகின்றனர். கம்ப ராமாயணத்தைக் கரைத்துக் குடித்துவிட்டு, அதைப்பற்றிப் பேச சந்தர்ப்பம் எப்பொழுது கிடைக்கும் என்று துடித்துக்கொண்டிருக்கிறார் ஒருவர். சீவகசிந்தாமணி, மணிமேகலை முதலிய பழந்தமிழ் நூல்களை ஆராய்ச்சி செய்துவிட்டு வாது செய்வதற்கு ஆள் அகப்படுவாரா என்று அவதிப்பட்டுக்கொண்டிருக்கிறார் இன்னொருவர். சங்கீதத்தின் சகல நுட்பங்களையும் அலசி ஆராய்ந்து அறிந்து வைத்திருக்கிறார் இன்னொருவர்.

இச்சங்கத்திற்குக் கல்கத்தாத் தமிழர்களிடையில் இருக்கும் ஆதரவையும், அவர்கள் வைத்திருக்கும் பெரிய நூல் நிலையத்தையும் பார்க்கும் போது, இச்சங்கம் ஆரம்பித்து முப்பது, நாற்பது வருஷங்களாவது இருக்கும், இல்லாவிடில் இத்தனை ஆதரவையும், அரிய, பெரிய, பழைய தமிழ் நூல்களையும் அது சேகரித் திருக்க முடியுமா என்று தோன்றும். ஆனால் விசாரித்ததில் சங்கம் ஆரம்

பித்து ஐந்து வருஷங்கள் தான் முடிவடைந்திருக்கின்றன என்று தெரிந்தது.

பெரிய விஞ்ஞானியும், அலகாபாத் சர்வகலாசாலையின் பௌதீகப் பேராசிரியருமாகிய டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் எப். ஆர். எஸ் அவர்களின் தலைமையின் கீழ் ஆரம்பிக்கப் பட்ட இச்சங்கத்துக்கு இன்று கல்கத்தா ஹைறஜின் இன்ஸ்டிடிட்யூட்டின் பேராசிரியராக விளங்கும் ஸ்ரீ கே. சுப்ரமண்யம் தலைவராக விளங்குகிறார். அமெரிக்கா முதலிய மேல் நாடுகளில் பிரயாணம் செய்துள்ள இவருடைய தமிழபிமானம் சொல்லி முடியாது.

இச் சங்கத்தின் நான்கு தூண்கள் போல் விளங்கும் ஸ்ரீ ஏ. எஸ். கிருஷ்ணன், ஸ்ரீ என். சிங்காரம், ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசன், ஸ்ரீ தியாகராஜன் இவர்களோடு ஒரு நாள் நான் பேசிக் கொண்டிருந்தேன்—அதாவது அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள், நான் கேட்டுக்கொண்டிருந்தேன். அப்பொழுது தங்கள் சங்கத்தைப் பற்றி அவர்கள் ஒரு விஷயம் வெகு பெருமையாகச் சொல்லிக் கொண்டார்கள்.

பாரதி போன்ற பெரியார்களின் இறந்த தினத்தைத் தமிழ் நாட்டில் கொண்டாடி வருகிறார்கள் அல்லவா? இது தவறு, அவர்கள் பிறந்த தினத்தைக் கொண்டாடுவது தான் முறை என்று பாரதி தமிழ்ச் சங்கத்தார் தமிழ் பெரியார்களின் பிறந்த தினத்தைத் தான் கொண்டாடி வருகிறார்களாம்.

கல்கத்தாத் தமிழர்களை நல்ல பேச்சாளர்களாக மாற்றியதைப்பற்றி பாரதி தமிழ்ச் சங்கத்தின் மீது எனக்கு ஒரு விதத்தில் சந்தோஷம் என்றாலும் இன்னொரு விதத்தில் வருத்தமே.

சந்தோஷத்தின் காரணத்தை இதோ சொல்லுகிறேன்.

ஸ்திரீகளைக் கண்டு நடுங்கி, நடுங்கி நாம் வாயைத் திறப்பதற்கே நடுங்குகிறோம். வீட்டில் இப்படிப் பயந்தது, வழக்கமாய்ப் போய், பின்னல் வெளியில் ஏதாவது கூட்டத்தில் பேசச்சொன்னாலும் பேசுவதற்கு நடுங்குகிறோம். நம் வீட்டு சகதர்மிணிகளைக் கண்டு நடுங்காமல் இருப்பதற்காகவாவது ஆண்களாகிய நாம் எல்லோரும் பேசப் பழகிக்கொள்ள வேண்டும். அதற்கு நல்ல பயிற்சி, கல்கத்தாத் தமிழர்கள் சம்பந்தப்பட்ட வரையில் பாரதி தமிழ்ச்சங்கம் அளிக்கிறது.

ஆனால் வருத்தம் எதற்காகவென்றால், கல்கத்தா தமிழ்ப் பெண்களைக் கண்டுதான் வருத்தம். சங்கத்தின் அத்தனை பயிற்சியையும் புருஷர்கள் தங்கள் மனைவிகள் மீது பிரயோகிக்கும்போது அவர்கள் என்ன பாடு படுகிறார்களோ என்று நினைக்கும்போது தான் வருத்தமாக இருக்கிறது.

ஆகவே அவர்களும் இச்சங்கத்தில் சேர்ந்து ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாகப் பேசக்கற்றுக் கொண்டால்தான் பிழைக்கலாம்.

தங்கள் சங்கத்திலேயே பேசுவதற்கு இத்தனைபேர் இருந்தும் வெளியிலிருந்து யாராவது வந்தால் போதும், பாரதி தமிழ்ச் சங்கத்தார் விடமாட்டார்கள். அவர்களை வற்புறுத்திப் பேச வைத்துவிட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பார்கள்.

எதற்காக இப்படிச் செய்கிறார்கள் என்று தெரியவில்லை. தமிழின் மீதும், தமிழர்கள் மீதும் தங்களுக்குள்ள ஆர்வத்தினால்தான் அப்படிச் செய்கிறார்களா, இல்லை, தங்கள் பேச்சுத்திறமையையும், தமிழ் நாட்டிலிருந்து வருகிறவர்கள் பேச்சுத் திறமையையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குத்தான் அப்படிச் செய்கிறார்களா என்றும் தெரியவில்லை.

பின்சொன்ன காரணமாகவிருப்பின் தமிழ்நாட்டார் இந்தப் பாரதி தமிழ்ச் சங்கக்காரர்களைக் கண்டு சற்று பயப்பட வேண்டியதுதான்.

இந்த சங்கத்தைப் போலவே இந்தியா முழுவதும் அங்கங்கே சங்கங்கள் ஏற்பட்டு வேலை செய்ய முற்படு மாயின் தமிழரின் பாஷாபிமானத்தைக் கண்டு, மற்ற மாகாணத்தவர் எல்லோரும் பயப்படுவர் என்பதில் சந்தேகமில்லை.

என்ன கேட்கிறீர்கள்! நான் அவர்கள் சங்கத்தில் பேசினேனா என்று கேட்கிறீர்களா? பேசாமல் அவர்களை ஏமாற்ற முடியுமா, என்ன?

ஆனால் அவர்கள் எனக்குப் பேச சந்தர்ப்பம் அளித் ததும் எனக்கு ஒரு விதத்தில் நல்லதாகப்போயிற்று.

என் மனைவியை சில காரணங்களுக்காக வாங்கு வாங்கு என்று வாங்கவேண்டுமென்று எனக்கு வெகு காலமாகவே ஆவல். ஆனால் அவளிடம் நேரில் சொல்ல முடியாமல் தவித்துக்கொண்டிருந்தேன். அன்று கூட்டத் துக்கு அவளும்கூட வந்திருந்தா ளாதலால் பொதுவாக படித்த பெண்களைப்பற்றிச் சொல்வதுபோல் எனக்கு அவள் மீது இருந்த ஆத்திரத்தை யெல்லாம் கொட்டித் தீர்த்தேன். இந்த ஒரு உதவிக்காகவாவது நான் இந்த பாரதி தமிழ்ச் சங்கத்தாருக்கு என்றும் கடமைப் பட்டுள்ளேன்!

இந்த படித்த பெண்களைக் குறை கூறி நான் இது வரை எத்தனையோ கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். படித்த பெண்களைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள இருந்த எத்தனையோ நண்பர்களை அந்த யோசனையைக் கைவிடும்படி வற்புறுத்தியிருக்கிறேன். "படித்த பெண் வேண்டாம்" என்ற புஸ்தகமும் எழுதி அவர்களுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்திருக்கிறேன். இன்னும் அவர்கள் மீது எனக்குள்ள கோபத்தில் பஸ்களில் அவர்களுக்காக எழுந்து நிற்காமல் அவர்களைக் கால் ஒடிய நிற்க வைத்து மிருக்கிறேன்.

ஆனால் இந்தப் படித்த பெண்களை நான் படுத்தி வைத்த பாடெல்லாம் எவ்வளவு பெரிய தவறு என்பது இப்பொழுது தான் தெரிகிறது. கடவுள் ஏதோ ஒரு பெரிய நோக்கத்துடன் தான் இந்தப் படித்தப் பெண்களைச் சிருஷ்டித்திருக்கிறார் என்பதும் இப்பொழுது தான் புலனாகின்றது.

படித்த பெண் சரசு திடீரென்று நேற்றுக்காலை நினைத்துக்கொண்டு "அண்ணா" என்று கூப்பிட்டாள். (என் தங்கை பாரு என்னை அண்ணா என்று கூப்பிடுவதைப் பார்த்து சரசு என்னை அண்ணா என்று கூப்பிட ஆரம்பித்திருக்கிறாள். நாளைக்கு என் பெண் அனு என்னை அப்பா என்று கூப்பிடுவதைப் பார்த்து சரசுவும் என்னை அப்பா என்று கூப்பிடாமல் இருக்க வேண்டும்!)

"ஏன்!" என்று கேட்டேன்.

"ஊரெல்லாம் பஞ்சத்தைப் பற்றியே பேச்சாயிருக்கிறதே. நாம் என்ன பண்ணப் போகிறோம் என்றுதான் பயமாய் இருக்கிறது."

"இதோ பார். பாக்கிப் பேர் விஷயம் எப்படியோ, ஆனால் என்னைப் பொறுத்த வரையில் பயமில்லை"

"எப்படி?"

"எப்படியா? நீ இருக்கும் போது எனக்கு என்ன பயம்? நீ இருக்கப் பயமேன்!" என்றேன்.

ஆனல் சரசுவுக்கு நான் சொன்னது புரியவில்லை. புரியும்படி எடுத்துச் சொல்லவும் எனக்குப் பயமாக இருந்தது. ஆகவே உணவுப் பஞ்சத்தைக் கண்டு நான் ஏன் பயப்படவில்லை என்பதற்கு இதோ காரணம் கூறுகிறேன், கேளுங்கள்.

ஜனங்கள் எல்லோரும் குறைத்துச் சாப்பிட வேண்டும் என்பதற்காகச் சர்க்கார் என்னென்னமோ யுக்திகள் கையாண்டு பார்க்கிறார்கள். யார் யார் தயவையோ நாடிப் பார்க்கிறார்கள். ஆனல் இந்தப் படித்த பெண்களைக்கொண்டு இந்தக் காரியத்தை எவ்வளவு எளிதில் நிறைவேற்ற முடியும் என்பதை அவர்கள் இன்னும் உணரவில்லை.

சரசு எங்கள் வீட்டுக்கு வந்ததிலிருந்து நாங்கள் எல்லாரும் ஒரு புது உண்மையை உணர ஆரம்பித்தோம். வயிறு நிறையச் சாப்பிட்டால் தான் உயிர் வாழ முடியும் என்று நாங்கள் எல்லாரும் சரசு வரும்வரை நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனல் சரசு இது எவ்வளவு தப்பான எண்ணம் என்று நிரூபித்து விட்டாள்.

சரசு படித்த பெண், அதிலும் கல்லூரியில் சமையலை விசேஷ பாடமாக எடுத்துக் கொண்டவள் என்றதும் நாங்கள் எல்லாரும் நாக்கைச் சப்புக் கொட்ட ஆரம்பித்து விட்டோம். சரசு தினம் விதம் விதமாகச் சமைப்பாள், எல்லாரும் நாக்கை நீட்டிக் கொண்டு சாப்பிடலாம் என்று ஆசையாக இருந்தோம்.

சரசுவும் தினம் ஒரு விதமாகத்தான் சமைக்க ஆரம்பித்தாள். ஒருநாள் சமையலில் உப்பு அதிகமானல் இன்னொருநாள் சமையலில் புளி அதிகமாக இருக்கும். ஒரு நாள் சமையலில் புளி அதிகமாக இருந்தால், இன்னொரு நாள் சமையலில் காரம் அதிகமாக இருக்கும்.

சரசு இப்படித் தினம் ஒரு விதமாகச் சமைக்க ஆரம்பிக்கவே, நான் முன்னே குறிப்பிட்ட புது உண்மை எங்கள் எல்லாருக்கும் நன்கு புலனாயிற்று.

எங்கள் எல்லாருக்கும் சாப்பாடு குறைந்துகொண்டே வந்து, இப்பொழுது முன்பு சாப்பிட்டதில் பத்தில் ஒரு பங்கு தான் சாப்பிடுகிறோம். இருந்தும் இன்றுவரை இன்னும் உயிரோடுதான் இருந்து வருகிறோம்.

ஆகவே சரசுவைப் போன்ற படித்த பெண் ஒவ்வொரு வீட்டிலும் சமையல் வேலையை மேற்கொண்டாளானால் நாட்டில் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் உணவுப் பஞ்சம் எப்பொழுதோ தீர்ந்திருக்கும். மூவாயிரம் காலரிகள் சாப்பிடும் அமெரிக்கர்களிட மிருந்து ஆயிரம் காலரிகள் சாப்பிடும் இந்தியர்கள் உணவை எதிர்பார்ப்பதை விடுத்து தங்கள் உணவை ஐந்நூறு காலரிகளாகக் குறைத்துக் கொண்டு, மீதி உணவை அமெரிக்கர்களுக்கு அனுப்பி அவர்களை ஐயாயிரம் காலரிகள் சாப்பிடும்படி செய்திருப்பர்.

ஆகவே இத்தகைய உணவுப் பஞ்சம் அடிக்கடி ஏற்படாமல் இருப்பதற்காகவாவது, நாட்டில் உள்ள எல்லாரும் படித்தபெண்களைத் தான் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்று சட்டம் போட வேண்டும்.

சிலர் படித்த பெண்ணாக இருந்தாலும் தங்கள் தாயாரிடமிருந்து வாய்க்கு ருசியாகச் சமைக்கத் தெரிந்து கொண்டு விடுகின்றனர். இந்த விபரீத நிலைமை ஏற்படாமல் பார்த்துக் கொள்வதற்காக இத் தாயார்களுக்கெல்லாம் தீவாந்திர தண்டனை கொடுத்தாலும் தவறில்லை என்று கூறுவேன். இல்லையோ, இந்தப் பெண்களைத் தாயாரிடமிருத்து பிரித்து ஹாஸ்டலிலேயே வைத்துவிட வேண்டும்.

சமையலை விசேஷ பாடமாக எடுத்துக்கொள்ளும் பெண்களை விட, மற்றப் பெண்கள் தாங்களாகவே சுமாராகச் சமைக்கக் கற்றுக்கொண்டு விடுகிறார்கள். இந்த நிலைமையைத் தடுப்பதற்காக, எல்லாப் பெண்களுக்கும், கல்லூரிகளில் சமையல் விசேஷ பாடமாகச் சொல்லித் தரப்பட வேண்டும்.

கல்லூரிகளில் சமையலை விசேஷ பாடமாக எடுத்துக் கொண்டு யோக்யதா பத்திரம் பெற்ற பெண்கள் தான் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடித்தனம் நடத்தலாம் என்று சட்டம் போட்டாலும் நல்லது என்று கூறுவேன்.

ஆக நாட்டில் உள்ள எல்லாப் பெண்களும் எப்பொழுது படித்த பெண்களாக மாறுகிறார்களோ அன்று நாட்டில் உணவுப் பஞ்சமே இருக்காது என்பதில் சந்தேகமில்லை. சாப்பிடுவதற்கு ஆசையோ, அல்லது சாப்பிடுவதற்கு ஆளோ இருந்தால்தானே பஞ்சம் ஏற்பட?

7000 அடிக்கு அப்பால், அதாவது சமுத்திர மட்டத்தி லிருந்து 7000 அடிக்கு அப்பால் மேலே உள்ள உதக மண்டலத்துக்குச் சமீபத்தில் சென்றிருந்தேன். கோடை வந்தாலே இந்தப் பணக்காரர்கள் எல்லாம் ஓடிப்போய் விடுகிறார்களே, அப்படி இந்த ஊரில் என்னதான் இருக் கிறது என்று தெரிந்து கொள்வதற்காக உதகமண்டலம் சென்றிருந்தேன். அதோடு உதக மண்டலம் செல்கிறவர் கள் எல்லாம் பணக்காரர்கள் என்றும் ஜனங்கள் தவறு தலாக நினைத்துக் கொள்கிறார்கள் அல்லவா, அதைப் போலவே நம்மைப் பற்றியும் நினைத்துக்கொண்டு அவதிப் படட்டுமே என்றும் எனக்கு உள்ளூற ஒரு ஆசை. இப்படி நான் ஆசைப்பட்டதற்குக் காரணம் இல்லாமலும் இல்லை.

என் தம்பிக்குப் பெண் கொடுப்பதற்காகச் சிலர் வந்து போய்க்கொண்டிக்கிறார்கள். அந்த சமயம் பார்த்து நான் உதக மண்டலம் போய் விட்டால், ரொம்பப் பணக் காரர்கள் போலிருக்கிறது என்று பயந்து அதிக வரதட் சணை அழுவார்கள் அல்லவா?

ஆக, இத்தகைய காரணங்களைக் கொண்டு உதக மண்டலம் போனேன்.

ஆனால் உதக மண்டலம் போனாலும் போனேன், நான் இப்பொழுது பெரிய வேதாந்தியாகி விட்டேன். கடவுளா வது, இருப்பதாவது, எங்கே இருக்கிறார், எதற்காக இருக் கிறார் என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நான், இப் பொழுது கடவுள் இருக்கிறார் என்று எந்தக் கோவிலிலும் சத்தியம் பண்ணத் தயாராக இருக்கிறேன்.

நீலகிரி மலைச்சாரல்களில் ஓங்கி வளர்ந்திருக்கும் யூகாலிப்டஸ் மரங்களையும், மலை உச்சியை வந்து தழுவும் அந்த மேகக் கூட்டங்களின் மோகனக் காட்சியையும், அவ்வப்பொழுது தூரத்தில் உள்ள வீடுகளை வந்து மறைக்கும் அந்த மூடுபனியையும் பார்த்த பிறகு, இவ் வளவு அழகிய பொருள்களைச் சிருஷ்டித்தவனுக்குக் கட

வுள் என்று பெயர் கொடுத்து வணங்கினாலும் தவறில்லை என்று தோன்ற ஆரம்பித்து விட்டது.

அது என்னமோ தெரியவில்லை, மேலே போகப் போக, அதாவது நாம் மேலே இருப்பதாகக் கருதும் சுவர்க் கத்தைக் கொஞ்சமாவது நெருங்க, நெருங்க, இயற்கையின் எழில் அதிகரித்துக் கொண்டே போகிறது. இந்த எழில் அதிகரிக்க, அதிகரிக்க, நமக்குக் கடவுளின் ஞாபகமும் அதிகரித்துக் கொண்டு போகிறது.

இதனால் தான் போலும் நமது மகரிஷிகள் ஈசுவரத் தியானம் செய்ய வேண்டுமென்றால் உடமே மலை உச்சிகளை நோக்கி ஓடிப் போயிருக்கிறார்கள்.

வருஷத்தில் ஆறு மாதம் மலை உச்சிகளுக்கு ஓடிப் போய் விடுவது என்று நம் சர்க்கார் அதிகாரிகள் வைத் திருக்கிறார்களே, அதன் மர்மமும் எனக்கு இப்பொழுது தான் விளங்குகிறது. மலை உச்சியில் உள்ள யாருக்கும் அங்குள்ள அழகிய காட்சிகளைப் பார்த்தாலும் சரி, அங் குள்ள ஆபத்துக்களைப் பார்த்தாலும் சரி (வளைந்து, வளைந்து, நெளிந்து, நெளிந்து, செல்லும் மலைப் பாதைகளில் கார் சற்றுத் தவறினாலும் கீழே அதள பாதாளத்துக்குப் போக வேண்டியது தான்) பகவானுடைய ஞாபகம் வராமல் இருக்காது.

பகவானுடைய ஞாபகம் நமக்கு வந்தால், பகவானுக் கும் நம்முடைய ஞாபகம் வராமல் இருக்காதல்லவா? அதனால் தானோ என்னமோ மலை உச்சிகளுக்கு அடிக்கடி போய்க் கொண்டிருக்கும் சர்க்கார் அதி காரிகள் பக்கமே கடவுள் இன்னும் இருந்து வருகிறார். சமுத்திர மட்டத்தில் இருக்கும் ஏழை இந்தியர்களை அடியோடு மறந்து விட்டார்.

உலகத்தில் முன்னுக்கு வர வேண்டுமானால் எத்தனை யோ கஷ்டங்களைச் சகிக்க வேண்டும், எத்தனையோ இடையூறுகளைக் களைய வேண்டும், எந்த ஆபத்துக்கும் தயாராக இருக்க வேண்டும் என்ற படிப்பினைகளையும்

இந்த மலைப் பிரதேசங்கள் நமக்குக் கற்றுக் கொடுக்கின்றன.

உதக மண்டலத்தில் எங்கு பார்த்தாலும் மேடும், பள்ளமுமாக இருப்பதால், மேட்டிலிருந்து பள்ளத்துக்கும், பள்ளத்திலிருந்து மேட்டுக்கும் அடிக்கடி போய்க்கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதெல்லாம் வாழ்வில் சுகமும் துக்கமும், வாழ்வும் தாழ்வும், இன்பமும் துன்பமும் இம்மாதிரித்தான் மாறி, மாறி வரும் என்ற நினைவு வரும். எப்படி உதக மண்டலத்தில் இருக்க வேண்டுமானால் மேடு பள்ளத்தைப் பொருட்படுத்த முடியாதோ, அதைப் போலவே வாழ்க்கையை நடத்தவேண்டுமானாலும் இன்ப, துன்பத்தைப் பொருட் படுத்த முடியாது என்ற வைராக்கியம் ஏற்படும்.

இன்னும் உதகமண்டலத்தில் எப்பொழுது பார்த்தாலும் குளிர் இருந்து கொண்டிருக்கும். இந்தியாவின் மலை வாசப் பிரதேசங்களிலேயே இங்குதான் குளிர் அதிகம் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

இந்தக் குளிரைப் பற்றி ஒரு விஷயம். எவ்வளவுக்கெவ்வளவு குளிர் அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு ஆனந்தம் என்று குளிர் பிரதேசங்களில் இருப்பவர்கள் கூத்தாடுகிறார்களே, அதற்குக் காரணம் தெரியுமா? வெறும் குளிரா ஆனந்தமாக இருக்கிறது? இல்லை. ஒருக்காலும் இல்லை. அப்படி வெறும் குளிர் ஆனந்தமாக இருக்குமானால் எல்லாரும் சட்டையைக் கழற்றி விட்டு, வெட வெட வென்று குளிரில் நிற்க மாட்டார்களா!

கம்பளிச் சட்டைக்கு மேல் கம்பளிச் சட்டை போட்டுக் கொண்டு, குளிரை எதிர்த்து நிற்பதில் தான் ஆனந்தம் இருக்கிறது. அதனால் தான் மலைப் பிரதேசங்களில் இருப்பவர்கள் வீட்டுக் குள்ளேயே குளிருக்கு அடக்கமாக உட்கார்ந்து இராமல், கம்பளிச் சட்டையும், அதற்கு மேல் ஒரு கம்பளிச் சட்டையும் போட்டுக் கொண்டு, கிழக்கும், மேற்கும், அதாவது மேலும் கீழும் நடக்கிறார்கள்.

உடம்பு எப்பொழுதும் அது இருக்கவேண்டிய 98.4 டிகிரி உஷ்ணத்தில் இருந்தால் தான் சுகமாக இருக்கும். ஆனல் வெளி உஷ்ணமும் அதே டிகிரியில் இருந்தால் குஷியாக இருக்குமா? இருக்காது. நன்ருகக் குளிர வேண்டும்; அந்தக் குளிரைப் போக்க நாம் கம்பளிக்கு மேல் கம்பளி போட்டுக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் ஆனந்தம்.

இதைப் போலவே தான் வாழ்க்கையிலும் ஆபத்துக் களோ, கஷ்டங்களோ ஒன்றும் வராமல் இருந்தால் வாழ்க்கை ரஸிக்காது. கஷ்டங்களும், ஆபத்துக்களும் நிறைய வரவேண்டும். அதை நாம் எதிர்த்துச் சமாளிக்க வேண்டும். அப்பொழுதுதான் ஆனந்தம்.

இந்த படிப்பினையை நான் உதக மண்டலத்தில் உணர்ந்தேன். அடிக்கடி உதக மண்டலத்துக்குச் செல்லும் நம் சர்க்கார் அதிகாரிகளும், இந்தப் பாடத்தை அங்கிருந்து கற்றுக் கொண்டு விட்டார்கள் என்று தெரிகிறது. இல்லா விடில் என்ன பொதுஜன எதிர்ப்பு இருந்தாலும் லட்சியம் பண்ணுமல் தங்கள் வழியே போய்க் கொண்டிப்பார்களா?

நீங்களும் ஒரு நடை உதக மண்டலத்துக்குப் போய் வாருங்கள். இந்த உண்மைகளை உணர்வீர்கள். வேறு ஒன்றையும் உணராவிட்டாலும், நாம் காண்பதெல்லாம் பொய் என்னும் உண்மையை அங்கு கடைகளில் விற்கும் யூகாலிப்டஸ் தைல பாட்டில்களைப் பார்த்து விட்டு உணர் வீர்கள். வாசனைப் பாட்டில்களைப் போல் விதம் விதமாகத் தோற்ற மளிக்கும் அத்தனை பாட்டில்களிலும் யூகாலிப்டஸ் தைலம் தான் இருக்கிறது என்று தெரிந்ததும் நீங்கள் மூர்ச்சை போட்டு விழுந்தாலும் விழுவீர்கள். ஆனல் நீங்கள் அப்படி விழுந்தாலும் கவலையில்லை. அந்த பாட்டில் களிலுள்ள யூகாலிப்டஸ் தைலத்தை உங்கள் மூக்கில் தட வினல் நீங்கள் உடனே அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து விடுவீர்கள்.

இக்கட்டுரையின் தலைப்பைக் கண்டு என் பம்பாய் நண்பர்கள் அநேகர் ஆச்சரியப்படலாம். பம்பாயில் இருபது நாள் கொட்டமடித்துவிட்டு, பத்துநாள் என்று பொய் சொல்லுகிறான் பார்த்தாயா என்று திகைப்புறலாம்.

இருபத்து நான்கு மணி கொண்டது ஒருநாள் என்ற கணக்கின்படிபார்த்தால் நான் பம்பாயில் இருந்தது இருபது நாள் தான், ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் நான் நாளை இந்த மாதிரி கணக்குப் பார்க்கும் வழக்கத்தைவிட்டு எத்தனையோ நாட்களாகி விட்டன.

நாளை இந்தமாதிரி மணிக் கணக்குக் கொண்டு கணக்கிடும் வழக்கத்தை நான் விட்டதற்கு, கலியாணத்தின் போது வாங்கிக் கொடுப்பதாகச் சொன்ன ரிஸ்டு வாச்சை என் மாமனார் இன்னும் வாங்கிக் கொடுக்காதது காரணமாக இருக்கலாம்.

இப்பொழுதெல்லாம் நான் அன்றன்று செய்யும் வேலையைக்கொண்டு தான் நாளைக் கணக்கிடுகிறேன். அந்தக் கணக்கின்படி பார்த்தால் நான் பம்பாயில் இருந்த இருபதுநாள் காலத்துக்குள் பத்துநாள் வேலையைத்தான் பார்த்திருக்கிறேன். அதற்காகத்தான் 'பம்பாயில் பத்து நாள்' என்றேன்.

இதற்கு முன்னர் நான் பம்பாய்க்குப் போன போதெல்லாம் ஒரு நாளைக்கு இருபது கப் காப்பிக்கும், டீக்கும் குறையாமல் சாப்பிடுவேன். அதாவது பழைய நண்பர்களை இருபது பேருக்குக் குறையாமல் சந்திப்பேன். காலையில் ஆறு மணிக்கு எழுந்து புறப்பட்டால், ராத்திரி திரும்ப படுக்க வருவது பன்னிரண்டு மணிதான்.

ஆனால் இந்தத் தடவை அத்தனை சிரமம் எனக்குப் பம்பாய் வாசிகள் வைக்கவில்லை. கொஞ்சகாலமாக ஒருவரை யொருவர் முதுகில் குத்திக்கொள்ள ஆரம்பிக்கவே, சர்க்கார் ஊரடங்குச் சட்டம் பிறப்பித்து விட்டார்கள். இதன்படி காலை ஆறு மணியிலிருந்து மாலை ஆறு மணி

வரையில் ஜனங்கள் வெளியில் சஞ்சரிக்கலாம். சாயந்திரம் மணி ஆறுனல், புருக்கள் கூண்டில் வந்து அடைவதுபோல எல்லாரும் வீட்டுக்கு வந்து அடையவேண்டும்.

பம்பாய்க் கத்திக்குத்துக் கெல்லாம் யாரோ குண்டர்கள் என்று இருக்கிருர்களாமே அவர்கள் தான் காரணம் என்று பம்பாய்ப் பத்திரிகைகள் ஓலமிடுகின்றன. ஆனல் இந்த குண்டர்களிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, இந்த குண்டர்கள் எப்படி இருப்பார்கள், அவர்களின் அங்க அடையாளங்கள் என்ன என்று யாராவது பொது ஜனங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமே, கிடையாது. குண்டர்களைச் சிறைப்படுத்திய சர்க்கார்கூட இது விஷயத்தை அறிவிக்கவில்லை.

இதனல் தெருவில் போகும்போதெல்லாம் யாரைக் கண்டாலும் குண்டர்கள் போல் தோற்றமளித்தது. அதோ அந்த நீண்ட சட்டை அணிந்து குல்லாய் வைத்துக் கொண்டு போகிருனே, அவன் ஒரு குண்டனய் இருப்பானே, இல்லை, அதோ சூட் போட்டுக்கொண்டு போகிருனே, அவன் ஒரு குண்டனய் இருப்பானே என்று யாரைப்பார்த்தாலும் சந்தேகம் தோன்றியது.

இந்த சந்தேகம் என்னைப்பற்றியும் அநேகர் கொண்டார்கள் என்று தெரிந்தபோது நான் கொண்ட சந்தோஷம் கொஞ்சம் நஞ்சமல்ல. வீட்டில் சரசுவுக்கு நடுங்கி, நடுங்கி, யாரைக் கண்டாலும் நடுங்கும் சுபாவத்தைக் கொண்டுள்ள என்னைக் கண்டும் நான்குபேர் நடுங்குகிருர்கள் என்ருல் எனக்குச் சந்தோஷமாக இருக்காதா?

வாடகைக்கு வருகிருயா என்று டாக்ஸிக்காரனைக் கேட்டால் என்னை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்து விட்டுத்தான் ஒப்புக்கொள்வான். அப்படி ஒப்புக்கொண்டாலும், தன் முதுகுப்புறம் தெரியாமல் சீட்டில் சாய்ந்து உட்காருவான். நான் ஒரு குண்டனய் இருந்து முதுகில் குத்திவிட்டால்?

ஆக, கத்திக்குத்துக்களை விட, இப்படிப்பட்ட வீண் சந்தேகங்களினாலேயே பம்பாய் வாசிகள் அதிகம் அவதிப் பட்டுக்கொண்டிருக்கின்றனர். ஆனால் இதைவிட அதிகப் படி அவதி ஒன்று இருக்கிறது. அதுதான் இந்த ஊரடங் கும் சட்டம்.

இந்த ரேஷன் காலத்தில் நண்பர்களுக்குத் தொந் தரவு கொடுக்கக்கூடாது, ஹோட்டலில் தான் தங்குவது என்று தான் இந்தத் தடவை பம்பாய்க்குப் போனேன். ஆனால் நண்பர்களை விட்டு இப்படி நான் பிரிந்திருப்பது என் ஹோட்டல்காரருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே சமையலில் தம் கைவரிசை முழுமையையும் காட்ட ஆரம் பித்துவிட்டார். எவ்வளவு மோசமாகச் சமைக்க முடி யுமோ அவ்வளவு மோசமாகச் சமைக்க ஆரம்பித்தார். சோறு வாயில் வைக்க வழங்கமுடியாமற் போகவே நான் நண்பர்களை நாடிப்போகவேண்டி வந்துவிட்டது. அதற்கு இந்த ஊரடங்கும் சட்டம் மிகவும் உதவிசெய்தது.

மாலை ஆறுமணிக்கே வீடு திரும்ப வேண்டுமாதலால் எல்லாக் காரியாலயங்களும் ஐந்து மணிக்கே மூடிவிடும், எல்லாரும் ஐந்தரை மணி சமயத்துக்கு வீடு திரும்பி விடு வார்கள். இதுதான் சமயமென்று நானும் யாராவது ஒரு நண்பர் வீட்டில் போய் நிற்பேன்.

நான் போய்ச் சேர்ந்த அரைமணி நேரத்துக்கெல்லாம் 'கர்ப்யூ' நேரம் ஆரம்பித்துவிடு மாதலால் நண்பர் தவி, தவி என்று தவிப்பார். ஆறு மணிக்குள் என்னை எப்படி யாவது வீட்டைவிட்டு அனுப்பவேண்டும் என்று கவலைப் படுவார். ஒவ்வொரு வாக்கியத்தையும் "சரி வரேளா!" "சரி வரேளா!" என்ற முத்தாய்ப்புடன் முடிப்பார்.

ஆனால் இதற்கெல்லாம் அசைந்து கொடுக்கும் ஆசாமி நானா? அவர் கேட்கும் ஒவ்வொரு "சரி, வரேளா" வுக்கும் "இதோ! வந்து விட்டேன்" என்று சொல்லிக்கொண்டே போவேன். கடைசியில் மணி ஆறு ஆனதும் நண்பர் கையைப் பிசைய ஆரம்பித்து விடுவார். இனி நண்பர்

நம்மை வீட்டை விட்டுத் துரத்த முடியாது என்ற தைரியத்தில் நான் இருப்பேன். பாவம், நண்பருக்கு அன்று ராத்திரிச் சாப்பாட்டுச் செலவோடு, மறு நாள் காலை காப்பிச் செலவும் ஏற்படும்.

இந்த கர்ப்யூவினால் பம்பாய் வாசிகள் எவ்வளவோ திண்டாடினார்கள். இன்னும் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள். எதிர் பாராத நண்பர் வந்து கழுத்தையறுக்கும் தொல்லை வேறு. இன்னும் இவர்களுக்குப் பிடிக்காத நபர்களிடம் அகப்பட்டுக்கொண்டு இவர்கள் படும் கஷ்டம் வேறு.

இது மாதிரி நானும் எத்தனையோ இடங்களில் எனக்குப்பிடிக்காத ஆசாமிகளிடம் அகப்பட்டுக் கொண்டு தவித்தேன். சீக்கிரம் வேலையை முடித்துக் கொண்டு போய் விடலாம் என்று போவேன். ஆனால் அதற்குள் கர்ப்யூ ஆரம்பித்து விடும், நான் அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு தவிப்பேன்.

இப்படியாகத்தானே பம்பாய் வாசிகள் தவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் இந்த தவிப்பை ரொம்ப நாள் பார்க்க சரசு என்னை விடவில்லை. பம்பாயில் கத்திக் குத்து என்றதும் தினம் ஒரு தந்தி நான் சௌக்கியமாக இருக்கிறேன் என்று அடித்தால்தான் பம்பாயில் தங்கலாம் என்று சரசு தந்தி அடித்துவிடுவாள். "நான் சௌக்கியம்" என்னும் ஒரே தந்தியை ஒரே தந்தி ஆபீஸில் எத்தனை நாளைக்குத்தான் கொடுப்பது? ஆகவே பம்பாயில் இருந்த தந்தி ஆபீசுகளை ஒவ்வொன்றாக நாடிப் போனேன். அங்குள்ள தந்தி ஆபீசுகள் முடிந்து விடவே மூட்டையைக் கட்டிக்கொண்டு ஊருக்குத் திரும்பிவிட்டேன்.

"ஏன் ஸ்திரீகளையும் சந்தியாவந்தனம் பண்ணும்படி விதிக்கக்கூடாது?" என்று முனகிக்கொண்டே டம்ளர் ஜலத்தை எடுத்துக்கொண்டு முற்றத்திற்குப் போனேன். வாயால் ஏதோ முணுமுணுத்துக் கொண்டே ஜலத்தைக் கீழே கொட்டிவிட்டு "காப்பி எங்கே" என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தேன்.

பொழுது விடிந்து பொழுது அஸ்தமித்தால் இந்த தொல்லைதான்! சந்தியாவந்தனம் பண்ணினால் தான் காப்பி, சந்தியாவந்தனம் பண்ணினால்தான் சாப்பாடு, சந்தியாவந்தனம் பண்ணினால்தான் வீட்டில் அமைதி! இந்தப் பாழும் சந்தியாவந்தனத்தைக் கண்டு பிடித்த மகானுபாவன் யாரோ தெரியவில்லை.

ஒரு வேளை மனுவாய் இருப்பாரோ? ஆம், அவராய்த் தானிருக்கவேண்டும் (ஊருக்கிளைத்தவன் பிள்ளையார் கோவிலாண்டி) ஏனென்றால் இந்தக் காலத்தில் சமூகத் தில் என்ன ஊழல்களிருந்தாலும் பாவம் எல்லாம் அந்தப் பாவி மனுஷ்யன் தலையில்தான் விடிகிறது. அவர் ஸ்மிருதி தான் கொளுத்தப்படுகிறது. நானும் காலத்திற் கேற்ப அவரைத்தான் நிந்திக்கத் தொடங்கியிருக்கிறன்.

எனக்கு சாஸ்திரப்படி ஏழு வயதிலேயே உபநயனம். அதிலிருந்தே எனக்கும் சந்தியாவந்தனத்துக்கும் பகை. அப்பொழுது முதற்கொண்டே காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும் சந்தியாவந்தனம் பண்ணினால் தான் காப்பி என்று சொன்னால், எனக்கும் எனக்குச் சேர வேண்டிய காப்பிக்கும் குறுக்கே நிற்கும் சந்தியா வந்த னத்தைக் கண்டால் கோபம் வருமா, வராதா? நீங்களே சொல்லுங்கள். பூணூல் போடுவதற்கு முன்னால் எல்லாம் பல் தேய்த்தும் தேய்க்காமலும் காப்பி குடித்துப் பழக்க மான எனக்கு, இப்பொழுது இது ஒரு பெரும் இடைஞ் சலாயிருந்தது.

ஆகையால் ஏழு வயது முதற்கொண்டு இதுவரைக்கும் (எனக்கு இப்பொழுது 34 வயது ஆகிறது.) எனக்கும்

சந்தியா வந்தனத்துக்கும் விரோதம் இருந்ததில் ஆச்சரிய மில்லை. நான் காப்பி குடிப்பதை ஒரு பத்து நிமிஷ நேர மாவது தள்ளிவைக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே, இந்த சந்தியா வந்தனத்தைக் கண்டு பிடித்தார்களோ என்று கூடத் தோன்றுகிறது.

சந்தியாவந்தனம் பண்ணுவது எவ்வளவு தொல்லை யென்பது என் தாயாருக்கு ஏன் தெரியப்போகிறது? கொஞ் சத்தையாவது தெரிந்திருந்தால், இந்த மாதிரி என்னை நாள் தவருமல் காலையிலும் மாலையிலும் தொந்தரவு படுத் துவாளா? இதனுல் தான் ஏன் ஸ்திரீகளையும் சந்தியா வந் தனம் பண்ணும்படி விதிக்கக்கூடாது என்று கேட்கிறேன். இல்லாவிடில் இந்த சந்தியாவந்தனத் தொல்லைக்காக வாவது அடுத்த ஜன்மத்தில் ஸ்திரீயாகக்கூடப் பிறந்து விடலாம் போல் தோன்றுகிறது.

ஸ்திரீகளுக்குச் சமத்துவம் கொடுத்துத் தான் தீர்வது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் கனவான்கள் தயவு செய்து இந்த சந்தியாவந்தனத் தொல்லையிலும் அவர்களுக்குச் சரிபங்கு கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளு கிறேன். இல்லாவிடில் சட்ட சபை வீரர்களாவது ஜாதி பேதத்தை ஒழிப்பதை உத்தேசித்து ஏன் ஒரு சந்தியா வந்தனத் தடை மசோதா நிறைவேற்றக் கூடாது என்று எனக்குத் தெரிவிக்கவும்.

இந்த சந்தியா வந்தனம் பண்ணுவதுதான் எத்தனை தொல்லை? எழுந்திருக்கிறது, உட்காருகிறது, ஜலத்தைக் குடிக்கிறது, ஜலத்தைக் கொட்டுகிறது, மூக்கைப் பிடிக் கிறது, தலையைக் குட்டிக் கொள்ளுகிறது, கிழக்கே பார்க் கிறது, மேற்கே பார்க்கிறது, வடக்கே திரும்புகிறது, தெற்கே திரும்புகிறது. போதுமா? இந்த "கஸ்ரத்" வேலை யிலேயே கால் மணி ஆகிவிட்டால், பாக்கி காரியங்களை எப்பொழுது தான் செய்கிறது?

என் தாயார் நான் சந்தியா வந்தனம் என்று சொல்லி ஒரு டம்ளர் ஜலத்தைக் கீழே கொட்டிவிட்டு வந்தால்,

வாயை மூடிக்கொண்டு சும்மா யிருக்கிறேளோ? இல்லை. நான் முற்றத்திற்குப் போய் தண்ணீரைக் கொட்டிவிட்டு வரவேண்டியதுதான் பாக்கி, உடனே என் தாயார் "ஏண்டாப்பா, 32 காயத்திரி கூட சரியாகப் பண்ணக்கூடாதா? பாக்கி ஒண்ணும் பண்ணுட்டாக்கூட காயத்திரியாவது பண்ணுடா. நீ இந்த மாதிரி சந்தியாவந்தனம் பண்ணுவதற்குப் பணத்தைச் செலவழித்து பூணூல் போட்டிருக்க வேண்டாமே" என்று தான் 27 வருஷத்துக்கு முன்னால் செய்த தப்பிதத்தை எடுத்துச் சொல்லுவாள். திரும்பவும் போய் துண்டுக்குள் கையை வைத்துக்கொண்டு ஏதாவது மூணு முணுக்காவிட்டால், காப்பி வாயில் மண்தான். அதற்காக ஒரு மூலையில் போய் உட்கார்ந்து என் தலைவிதி, சந்தியாவந்தனம், சனாதனிகள் எல்லாரையும் நொந்து கொண்டு வாயில் ஏதாவது முணுமுணுத்துக் கொண்டிருந்து விட்டுத் திரும்புவேன். ஆனால் ஒரு சௌகரியம். மந்திரத்தை வாய்விட்டு சொல் என்று என் தாயார் சொல்லுவதில்லை. அதுவரையில் க்ஷேமம் தான்.

அப்படியாவது எனக்கு இந்தச் சனியன் பிடித்த சந்தியா வந்தனம் முழுக்கத் தெரியுமென்கிறீர்களோ? இல்லை. நான் சந்தியா வந்தனம் கற்றுக்கொண்டதெல்லாம் அந்த பூணூல் கலியாணம் நடந்த நாலு நாள் தான். அதற்கப்புறம் எனக்குத் தோன்றின பிரகாரமெல்லாம் ஜலத்தைக் கொட்டுவதும் (ஒரே யடியாய் சாய்த்துக் கீழே கொட்டாமல், உத்தரணி, உத்தரணியாய்க் கொட்டுவதுதான் முறை) மூக்கைப் பிடித்துக் கொள்வதும் தலையைக் குட்டிக் கொள்வதும் தான் நான் பண்ணும் சந்தியாவந்தனம்.

ஒருவரும் என்னை கவனிக்கவில்லையென்றால் முற்றத்திற்குப் போய் ஜலத்தை ஒரே யடியாய்க் கீழே கொட்டுவது தான் சுருக்கு வழி. ஆனால் வீட்டிற்கு யாராவது பெரியவர்கள் வந்துவிட்டால் எங்கே நம் குட்டை கண்டு பிடித்துவிடப் போகிறார்களோவென்று பஞ்சபாத்திர உத்தரணியைக் கண்காணாத இடத்திற்குக்கொண்டு போய்,

பலம் கொண்டமட்டும், பஞ்சபாத்திரத்தை உத்தரணியால் தட்டுவேன். இது நான் சந்தியாவந்தனம் பண்ணுகிறேன் என்று அவர்களுக்கு அடையாளம்.

இந்தத் தொல்லை பொறுக்கமாட்டாமல் நான் சந்தியா வந்தனம் பண்ணியாய்விட்டது என்று என் தாயாருக்கு பொய் சொல்லி ஏமாற்றப் பார்த்தேன். ஆனால் பாக்கி காரியங்களில் என் முயற்சி பலிக்கிறதே யொழிய இந்த காரியத்தில் மாத்திரம் என் ஜம்பம் பலிக்கிறதில்லை. அதோடுகூட என் சம்சாரம் தினந்தோறும் காலையிலும் மாலையிலும் மாமியார் சொல்படி வெள்ளி பஞ்சபாத்திரத்தில் ஜலமும், உத்தரணியில் விபூதியும் எடுத்து என் மேஜைமீது வைத்துவிட்டுப் போய்விடுகிறாள். இந்தக் காரியத்தில் மாத்திரம் மாமியாரும் மாட்டுப்பெண்ணும் மகா ஒற்றுமை! பாக்கி காரியங்களில் மாத்திரம் என் மத்தியஸ்தம் தேவை.

காலையில் எழுந்ததும் பல் கூடத் தேய்க்காமல் நான் பத்திரிகை வாசித்துக் கொண்டிருப்பேன். அப்பொழுது தலை நிமிர்ந்து பார்த்தால் எதிரேயுள்ள பஞ்சபாத்திர ஜலம் "என்னை கொண்டுபோய் கீழே கொட்டிவிட்டு வாயேன்" என்று ஓயாமல் சொல்வதுபோலிருக்கும். ஆகையால் இந்தத் தொல்லைக்காக நான் முடிந்த பொழுதெல்லாம் காலை வேளையில் காவேரியில் போய் ஸ்நானம் பண்ணிவிட்டு வந்து விடுகிறேன். சாயந்திரம் திரும்பவும் காவேரிக்கே "வாக்கிங்" போய்விட்டு வந்து விடுகிறேன். வீட்டிற்கு வந்ததும் காவேரியில் சந்தியாவந்தனம் பண்ணியாய் விட்டது என்று சொல்வது எளிதாயிருக்கிறது. என் தாயாருக்கு மகா திருப்தி. பிள்ளை இவ்வளவு நியம நிஷ்டையாயிருந்தால் எந்தத் தாயாருக்குத்தான் சந்தோஷமா யிராது?

ஆனால் இப்பொழுதெல்லாம் தேவலையே! முன்பு நான் சிறு பையனா யிருக்கும்பொழுது கோடை லீவிற்காக கிராமத்திற்குப் போவேன். உடனே அங்குள்ள கிழவர்களெல்லாம் என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளத்

தான் பார்ததார்களோ, அல்லது நான் பண்ணும் விஷமம் பொறுக்க மாட்டாமல்தான் என்னை ஊரை விட்டுத் துரத்தத்தான் பார்த்தார்களோ என்னைக் கண்டதும் ஏதாவது கேள்வி கேட்க ஆரம்பித்து விடுவார்கள்.

"ஏண்டாலே, உன்னைத்தாண்டா! எந்தக் கிளாஸ் வாசிக்கறே?"

"பர்ஸ்டு பாரம்"

"அப்படின்னா இந்த கணக்குப் போடு பார்க்கலாம். காலே அரைக்கால் காசுக்கு நாலே அரைக்கால் வாழைக்கா காசுக்கு எத்தனை வாழைக்கா?"

நான் விழிப்பேன். விழிக்காமல் என்ன பண்ணுவது? டவுனில் எல்லாம் இந்த மாதிரி கணக்கு எங்கே சொல்லிக் கொடுக்கிறார்கள். அதோடு கூட டவுனில் இருப்பவர்களுக்கு இந்த சங்கடமெல்லாம் எதற்காக? கடைக்காரன் சொன்ன விலைதான் நமக்கு நம்பிக்கையே யொழிய நாம் கணக்குப் போட்டு அவன் சொல்லும் விலை சரிதானா என்று பார்ப்பதில்லை. அதோடு அவன் 'பில்' ஒன்று கொடுத்து விட்டால் அதுவே பூரண நம்பிக்கை. இதெல்லாம் இந்தக் கிழங்களுக்கு எங்கே தெரியப்போகிறது?

முதல் கண்டம் தப்பியாய் விட்டது. இனிமேல் இரண்டாம் கண்டம்.

"ஏண்டாலே! உனக்குப் பூணல் போட்டாச்சோ?"

"ஆச்சு."

"எங்கே ஆபப்புநந்து சொல்லு பார்க்கலாம்."

ஆபப்புநந்தாவது நாகக்கொழுந்தாவது? இதெல்லாம் யார் கண்டார்கள்? திரும்பவும் விழிப்பதைத் தவிர வேறு வழியில்லை. இந்த வம்புக்காக நான் கிராமத்திற்குப் போனால் பகலில் வெளியில் தலைகாட்டுவது கிடையாது.

இந்தக் கிழங்கள் இப்படி என்னைக் "கோட்டா" பண்ணுகிறதுகளே இவர்களாவது சரியாகச் சந்தியா வந்தனம் பண்ணுகிறார்களா? இவர்கள் வண்டவாளம் தெரிய வேண்டுமானால் காவேரிக்கரையில் அல்லவா போய்ப்

பார்க்கவேண்டும். இவர்கள் கை மாத்திரம் உத்தரீயத்திற்குள் இருக்கும். காயத்திரி ஜபம் பண்ணுவதாகப் பாவனை. ஆனால் வாய் மாத்திரம் ஏதாவது பிதற்றிக்கொண்டிருக்கும்!

"என்ன தீக்ஷதரே! நாத்தங்கால் நட்டாச்சோ? எங்கே அந்தப் பயல் முனியன் காலம்பரவே வரேன்னானே, ஆளைக் காணுமே? வாய்தா கொண்டாவென்று கழுத்தை யறுக்கிறானே, நெல் விலை குறைஞ்சு விற்கிறதே" இத்யாதி.

இதுதான் இவர்கள் செய்யும் சந்தியாவந்தனம். இந்த கோபத்தை யெல்லாம், நம்ப பயல் மணியிடம் காட்டலா மென்றால் மனது கேட்கவில்லை. எனக்கே நம்பிக்கை யிருந்தால்தானே, நான் அவனை ஏன் சந்தியாவந்தனம் பண்ணவில்லை என்று அதிகாரம் பண்ணுவதற்கு? அதோடுகூட நான் அவனை ஏதாவது கேட்டுவிட்டால், எங்கே பாட்டியிடம் என்னைப்பற்றி சந்தியாவந்தனம் பண்ணவில்லை யென்று கோள் சொல்லி விடுவானோ என்கிற பயம் ஒரு பக்கம்.

ஐயோ! மணி ஏழரை ஆகிவிட்டது, பல் கூடத் தேய்க்காமல் எழுதிக்கொண்டிருக்கிறேனே? அதோ எங்கம்மாளே வந்துவிட்டாள்.

"ஏண்டா! கிட்டு! பொழுது விடிந்து நாலு நாழியாய் விட்டது, நீ மாட்டில் என்னமோ எழுதிக்கொண்டிருக்கிறாயே? பல் தேய்த்து சந்தியாவந்தனம் பண்ணுடா! காப்பி ஆறதேடா?"

பார்த்தீர்களா? காப்பிக்கும் சந்தியா வந்தனத்திற்கும் உள்ள உறவை!

தலையை நிமிர்ந்தேன். வழக்கம்போல் என் கண்ணெதிரே மேஜை மீது பஞ்சபாத்திரமும் உத்தரணியும் இருந்தது!

என்ன காரணமோ தெரியவில்லை, தமிழ் இலக்கியத்தில் கதாபாத்திரங்களை வர்ணிக்கும் வழக்கம் மறைந்து கொண்டு வருகிறது. எத்தனை பெரிய கதாபாத்திரமாக இருந்தாலும் சரி, கதாநாயகனாகவே இருந்தாலும் சரி, அல்லது கதாநாயகியாகவே இருந்தாலும் சரி, வர்ணனை இல்லாமலே கதைக்குள் நுழைந்து விடுகிறார்கள். என்னடா, நாம் எவ்வளவு பெரிய கதாபாத்திரம், ஒரு நாலு வரி வர்ணனை கூட இல்லாமல் உள்ளே நுழையலாமா என்று தற்கால கதாபாத்திரங்கள் துளிகூடச் சிந்தித்துப் பார்ப்பது கிடையாது.

பழையகால இலக்கியமாக இருந்தால் நிலைமை இவ்வளவு மோசமாகவா இருக்கும்? எவ்வளவுக்கெவ்வளவு முக்கியமான பாத்திரமோ அவ்வளவுக்கவ்வளவு அதிகப்படி பக்கம் அந்தப் பாத்திரத்தைப்பற்றி வர்ணனை இருக்காதா? எவ்வளவுக்கெவ்வளவு முக்கியமான பாத்திரமோ, அவ்வளவுக்கவ்வளவு உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் உள்ள ஒவ்வொரு அவயத்தின் அழகும் வர்ணிக்கப்படமாட்டாதா?

நான் வாசித்துள்ள சில பழைய இலக்கியங்களில் கதாநாயகியை உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் ஒரு அங்கம் கூட விடாமல் விஸ்தாரமாக வர்ணித்த ஆசிரியர், அத்துடன் திருப்தி யடையாமல் திரும்பவும் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரை வர்ணிக்க ஆரம்பித்து விட்டார்! உச்சந்தலையை யடைந்ததும் அவர் திரும்பவும் கீழே இறங்க ஆரம்பித்து விடுவாரோ என்று நான் நடு நடுங்கிக் கொண்டே படித்தேன். நல்ல வேளையாக அத்தகைய விபரீதம் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை. ஆசிரியர் கதாநாயகியின் உச்சந்தலைக்குப் போய்ச் சேர்ந்த சமயமும், கதாநாயகியைத் தேடிக்கொண்டு கதாநாயகன் கதைக்குள் நுழைந்த சமயமும் ஒன்று சேரவே ஆசிரியர் கதாநாயகனை வர்ணிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

தற்கால இலக்கியங்களில் உள்ள ஒரு சங்கடம் பழைய காலத்து இலக்கியங்களில் கிடையாது. தற்கால இலக்கியங்களில் யார் கதாநாயகன், யார் கதாநாயகி என்பது யாருக்கும் தெரியாது. ஆசிரியருக்கே தெரியாது. ஏன், கதாநாயகன், கதாநாயகிகளுக்கே தெரியாது.

இதனால் தற்கால இலக்கிய ரஸிகர்களுக்கிடையில் கதாநாயகன் யார், கதாநாயகி யார் என்று வீண் தர்க்கங்கள் எழுவதுடன் கதாநாயகன், கதாநாயகி, இவர்களுக்கு இடையிலே வீண் மனஸ்தாபங்கள் எழுவதுண்டு. வேறு யாரோ ஒரு கதாபாத்திரத்தை கதாநாயகி என்று நினைத்துக்கொண்டு கதாநாயகன் காதல் புரியத் தொடங்கி விடுவான்! இந்த நிலைமை எத்தனை விபரீதங்களுக்குக் காரணமாகும் என்று நான் சொல்லவேண்டியதில்லை.

இத்தகைய விபரீதங்களை உத்தேசித்தாவது தற்கால இலக்கியங்களில் கதாபாத்திரங்களுக்கு வர்ணனை இருப்பது மிகவும் அவசியம் என்று எனக்குப் படுகிறது. வர்ணனை நீளம் யாருக்கு அதிகமோ அந்த பாத்திரம் தான் கதாநாயகி என்று நாம் கொள்ளலாம் அல்லவா?

கதாநாயகிக்கு அடுத்தபடி நீளமான வர்ணனை உள்ளவர் தான் கதாநாயகன் என்று நினைத்தீர்களோ, நீங்கள் ஏமாற வேண்டியதுதான். ஸ்திரீகள் யாராக இருந்தாலும் சரி, வீடு கூட்டும் வேலைக்காரியாக இருந்தாலும் சரி, அல்லது ராஜகுமாரிக்குப் பின்னாலேயே விசிறியும் கையுமாகச் செல்லும் தாதியாக இருந்தாலும் சரி, இந்த வர்ணனை விஷயத்தில் மாத்திரம் ஸ்திரீகள், புருஷர்களை விட உயர்ந்தவர்கள்—அந்தப் புருஷர்கள் மன்னர்களாக இருந்தாலும் சரி, அல்லது மன்னாதி மன்னர்களாக இருந்தாலும் சரி. அது என்ன காரணமோ தெரியவில்லை, ஸ்திரீகளின் வர்ணனையில் காட்டும் அக்கறையிலும் சிரத்தையிலும் பத்தில் ஒரு பங்கு கூட ஆசிரியர்கள் புருஷர்கள் விஷயத்தில் காட்டுவதில்லை.

ஆனால் தற்கால ஆசிரியர்களுக்கு வர்ணனைக்கே அவகாசம் இருப்பதில்லை. திடுதிப்பென்று கதையை ஆரம்பித்து வைக்க வேண்டியது. திடுதிப்பென்று கதையை முடித்துவைக்க வேண்டியது. தற்கால கதாபாத்திரங்களும் நாம் அவர்களை வர்ணிப்பதற்காக சற்று ஆற அமர நிற்பதில்லை. சட, சட என்று வரவேண்டியது, சட, சட என்று ஏதாவது செய்யவேண்டியது, சட சட என்று போய்விடவேண்டியது.

வர்ணிப்பதற்கும், வாழ்க்கைக்கும் ஏதோ நெருங்கிய சம்பந்தம் இருப்பதாக நினைத்துக்கொண்டு சில எழுத்தாளர்கள் திண்டாடுகிறார்கள். "இந்தக் காலத்துக் கதாபாத்திரங்களை எப்படி ஸார் வர்ணிப்பது? திருப்பதியில் மொட்டைத்தலையனைக் கண்டாயா என்பது போல் எல்லாரும்தான் கிராப்புத் தலையும், சூட்டும் உடையுமாகக் காட்சியளிக்கிறார்கள்! இதில் யாரை வர்ணித்து யாருக்கு அடையாளம் புரியப்போகிறது!" என்று தற்கால ஆசிரியர்கள் சிலர் சொல்ல நான் கேட்டிருக்கிறேன்.

இவர்கள் பழைய கால இலக்கியங்களைச் சரியாகப் படிக்காததால்தான் தான் இப்படிப் பேசுகிறார்கள். பழைய காலத்து ஆசிரியர்கள் கதாபாத்திரங்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஆடை விஷயத்தைப் பற்றியே அவதிப்படவில்லை. அவர்கள் கதர் திட்டத்தை ஆதரித்தார்களா, அல்லது மில் திட்டத்தை ஆதரித்தார்களா, "ஸ்பிண்டில்கள்" வேண்டுமென்று சொன்னார்களா, அல்லது வேண்டாமென்று சொன்னார்களா என்றெல்லாம் கவலைப்படவில்லை. ஆடையை வர்ணிக்க ஆரம்பித்தால் அதைக்கொண்டு ஆளை அடையாளம் கண்டுகொள்ள முடியாது என்று பழைய காலத்து ஆசிரியர்கள் நினைத்தார்கள். ஏனெனில் மனிதன் இன்று போட்டுக்கொண்டிருக்கும் ஆடையை நாளைக்குப் போட்டுக்கொண்டிருப்பான் என்று எண்ணத் திடமில்லை. அதற்காக ஆளையே வர்ணிக்கத் தொடங்கினார்கள்.

ஆளுக்கு ஆள் வித்தியாசம் இருக்குமே, எல்லாரையும் வர்ணித்துக்கொண்டிருப்பது சாத்தியமா என்று தற்கால ஆசிரியர்கள் நினைக்கலாம். பழையகாலத்து ஆசிரியர்கள் உயிருடன் இருந்தால் இந்த நினைப்பைக்கண்டு ஆச்சரியப்படுவார்கள். ஏனெனில் இத்தகைய பேத மனப்பான்மை அவர்கள் கொள்ளவே இல்லை. மனிதனுக்கு மனிதன் வித்தியாசம் அவர்கள் பாராட்டவே இல்லை. அவர்கள் வர்ணனைக் கண்ணுக்கு எல்லா மனிதர்களும் ஒரே மாதிரி காணப்பட்டார்கள். எல்லாரும் செந்தாமரையொத்த முகத்தை யுடையவர்கள். எல்லாரும் காளையொத்த நடை யுடையவர்கள். எல்லாரும் உருண்டு, திரண்ட புஜத்தை யுடையவர்கள். எல்லாரும் முழங்கால்களைத் தொடும் கைகளை உடையவர்கள். (இதையும் ஒரு அழகாக முன்காலத்தில் கருதினர்கள். கைகள்தான் முழங்கால்களைத் தொடவில்லை. ஜிப்பாவின் கையாவது தொடட்டுமே என்று தான் தற்கால தையற்காரர்கள் ஜிப்பாவின் கையை அத்தனை நீளம் வைத்து விடுகிறார்கள் போலும்!)

அதைப்போலவே ஸ்திரீகளை எடுத்துக்கொண்டால் எல்லாருக்குமே மதியை யொத்த முகம், மீனையொத்த கண்கள், வில்லையொத்த புருவங்கள், முத்துப்போன்ற பற்கள், பவழம்போன்ற வாய், இடை உண்டோ, இல்லையோ என்ற சந்தேகம், இத்யாதி, இத்யாதி.

பழையகால இலக்கியத்தில் அங்க வர்ணனையைக் கொண்டு ஆளுக்கு ஆள் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாது. ஆனல் அந்த எழுத்தாளர்களைக் கேட்டால், "எதற்காக இந்தச் சிரமம்? நாங்கள்தான் ஒவ்வொரு பாத்திரத்துக்கும் ஒரு பெயர் கொடுத்துள்ளோமே! அதைக்கொண்டு அடையாளம் கண்டு கொண்டால் போச்சு! இதற்காகத்தானே நாங்கள் பெயர்களே கொடுக்கிறோம்" என்று சொல்வார்கள்.

ஆக வர்ணனையென்றால் ஏதோ பிரம்ம வித்தை யென்று நினைத்துக்கொண்டிருக்கும் நவீன எழுத்தாளர் கள் இனியாவது வர்ணனையில் இறங்குவார்கள் என்று நினைக்கிறேன்.

ஆனால் பழையகாலத்து ஆசிரியர்களை யொட்டி இவர் கள் அங்க வர்ணனையில் ஆரம்பித்தார்களோ, விபரீதத் தில் வந்து முடியும். ஆகவே இவர்கள் கதாநாயகிகள் உடுத்திக்கொண்டிருக்கும் புடவை வர்ணனையைப்பற்றி ஒரு அத்தியாயம் எழுதட்டும். ஜாக்கட் வர்ணனையைப் பற்றி இரண்டு அத்தியாயம் எழுதட்டும். அவர்கள் காலில் போட்டுக்கொண்டிருக்கும் சிலிப்பர் வர்ணனையைப் பற்றி மூன்று அத்தியாயங்கள் வேண்டுமானாலும் எழுதட்டும். ஆனால் தப்பித்தவறி இந்த சாமான்கள் எந்தக் கடையில் கிடைக்கின்றன என்று மட்டும் தெரிவித்து விட வேண் டாம். அப்படித் தெரிவித்தீர்களோ, புருஷர்களாகிய நம் பாடு ஆபத்துத்தான்!

ஜாதகப் பொருத்தத்தைப் பார்த்துப் பெரியோர்களாகக் கல்யாணம் நிச்சயம் பண்ணி வைத்த நாட்கள் போய் இப்பொழுது விளம்பரப்படுத்தி மணமகன், மணமகளைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் அதிகரித்து வருகிறது. இதனால் பத்திரிகைகாரர்களுக்கு விளம்பர வரும்படி அதிகரித்ததே யொழிய, மணமகளுக்குச் சரியான மணமகனோ அல்லது மணமகனுக்குச் சரியான மணமகளோ கிடைத்ததாகத் தெரியவில்லை.

இம்மாதிரி விளம்பரப்படுத்தி மணமகன், மணமகளைத் தேர்ந்தெடுக்கும் வழக்கமே நாம் முக்கியமாக, முதலாளிகள் குமாஸ்தாக்களைத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பார்த்துக் கற்றுக்கொண்டதுதான்.

எந்தக் காரியாலயத்தின் முதலாளிக்காவது ஏதாவது ஒரு வேலையைச்செய்ய ஒரு குமாஸ்தா வேண்டுமென்றால், அவர் உடனே என்ன செய்கிறார்? இன்னின்ன யோக்யதாம்சங்கள் இருக்கவேண்டும், இதே வேலையில் பழைய அனுபவம் இருக்கவேண்டும், இன்ன சம்பளம்தான் கொடுக்க முடியும், அது வருஷத்திற்கு இவ்வளவுதான் உயரும், அது கடைசியில் இன்ன சம்பளத்தில்தான் போய் நிற்கும் என்றெல்லாம் குறிப்பிட்டு விளம்பரப்படுத்துகிறார். கடைசியில் வரும் மனுக்களையெல்லாம் கவனித்து சிலரைத் தம்மை பேட்டி காணும்படி அழைக்கிறார். எல்லாரும் ஒரு குறிப்பிட்ட நாளில் அவரைப் பேட்டி காண வருகிறார்கள். வந்தவர்களை யெல்லாம் முதலாளி ஒவ்வொருவராய்ப் பேட்டி காண்கிறார். கடைசியில் தமக்குப் பிடித்த ஒருவரைப் பொறுக்கி எடுக்கிறார்.

பொறுக்கினவரை ஆறு மாதம் 'பரீட்சை' பார்க்கிறார். பிடித்திருந்தால் வேலையைக் 'காயம்' பண்ணுகிறார். பிடிக்காவிடில் பிடிக்கவில்லை என்று சொல்லி அனுப்பி விடுகிறார்.

ஆனால் மணமகன், மணமகள் விஷயத்திலும் இதே முறையைக் கையாளுகிறார்களோ என்றால், இல்லை.

விளம்பரம் பண்ணும் முறைக்கு மாத்திரம் இந்த முதலாளிகளைப் பின்பற்றின இவர்கள் கெடுக, இதே முறையைக் கையாள வேண்டாமோ?

சில அம்சங்களில் என்னமோ இந்த முறையை அப்படியே பின்பற்ற முடியாது, ஒப்புக்கொள்ளுகிறேன்.

முதலில், பழைய அனுபவம் இருக்கிறதா என்று கேட்கமுடியாது. இந்த துறையில் மாத்திரம், மேல்நாடுகளில் கூட, பழைய அனுபவம் இருந்தால் அது ஒரு பெரிய 'டிஸ்க்வாலிபிகேஷ'னாகவே கருதப்படுகிறது. எவ்வளவுக் கெவ்வளவு அனுபவம் துளியும் இல்லாதவர்களாக இருக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நல்லது.

இதே காரணத்தைக் கொண்டு தான் இத்துறையின் மனுதாரிகளை நான்கு மாத 'ப்ரோபேஷன்,' ஐந்துமாத 'ப்ரோபேஷன்' என்றெல்லாம் வைத்துக்கொள்ள முடியாது. தேர்ந்தெடுத்தால் வாழ்க்கை முழுதும் வைத்துக் கொள்ள வேண்டியதுதான். நடுவில் டிஸ்மிஸ், கிஸ்மிஸ் பண்ண முடியாது.

ஆகவே ஒரு குமாஸ்தாவைப் பொறுக்கி யெடுக்கும் விஷயத்தில் எத்தனையோ யோக்கியதாம்சங்களைக் கவனிக்கும் நாம் இந்த விஷயத்தில் அதைவிடச் சிரத்தை காட்ட வேண்டாமா? வரப்போகும் மணமகனோ, மண மகளோ, நமக்கு உகந்தவர்கள் தானா என்று கவனிக்க வேண்டாமா? ஆனால் இந்த விஷயத்தில் தான் நாம் கவனமே செலுத்துவதில்லை. அப்படி செலுத்தாததால் தான் விளம்பரம் பண்ணி மணமகனையோ, மணமகளையோ தேர்ந்தெடுத்தும் மணமக்கள் மனமொத்த வாழ்க்கை நடத்துவதில்லை. விளம்பரம் பண்ணி தேர்ந்தெடுக்காமல் ஜாதகப் பொருத்தம் பார்த்து தேர்ந்தெடுத்திருந்தால் ஒரு வேளை மணவாழ்க்கை மங்களகரமாய் இருந்திருக்குமோ என்றும் இவர்கள் மனம் வெதும்பிப் போகிறார்கள்.

ஆனால் இத்தகைய நிலைக்கு முக்கிய காரணமே இவர்கள் இந்த விளம்பர முறையைச் சரியானபடி பின்

பற்றாதது தான் என்று கூறுவேன். உதாரணமாக மணமகள் தேவை என்று விளம்பரப் படுத்தும் மணமகனை எடுத்துக் கொள்வோம். இவன் மணமகளுக்கு என் னென்ன யோக்கியதாம்சங்கள் இருக்கவேண்டும் என்று சொல்கிறான்? அழகாக இருக்கவேண்டும், படித்து இருக்க வேண்டும், பாடத் தெரியவேண்டும், அவ்வளவுதான் இவன் கேட்பது.

இந்த யோக்யதாம்சங்கள் உள்ள ஒரு பெண்ணே, அல்லது பெண்ணின் சார்பில் பெண்ணின் பெற்றோர்களோ மனுப்போட்டு, கல்யாணம் நடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்.

தான் கேட்டது இந்த மூன்று அம்சங்கள் தானே, இந்த மூன்று அம்சங்களைக் கொண்டே திருப்தி யடைவோம் என்று மணமகன் இருக்கிறானா? அழகான பெண் கேட்டோமே என்று பெண் அழகையே பார்த்துத் திருப்தி யடைகிறானா? படித்த பெண் கேட்டோமே என்று அவள் படித்துக் கொண்டிருப்பதையே பார்த்து ஆனந்தப் படுகிறானா? பாடத் தெரிந்த பெண் கேட்டோமே என்று அவள் பாடுவதையே கேட்டுச் சந்தோஷப் படுகிறானா?

இந்த மூன்றும் இல்லை. அதற்குப் பதில் காப்பி சரியாகப் போடத் தெரியவில்லை என்று ஒரு நாள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறான். துவையல் அறைக்கத் தெரியவில்லை என்று ஒருநாள் சண்டை போட்டுக் கொண் டிருக்கிறான். தான் முன்னறிவிப்பின்றி அழைத்து வந்த நண்பர்களுக்குக் கால்மணி நேரத்தில் சமைத்துப் போடத் தெரியவில்லை, அல்லது ஒருவர் காப்பிக்கு மாத்திரம் வைத்துக்கொண்டிருந்த பாலைக்கொண்டு பத்து பேருக்கு காப்பி போடத்தெரியவில்லை என்று சண்டை போடுகிறான்.

இத்தகைய சண்டைகளினால் அவர்களுடைய மண வாழ்க்கையின் அமைதி குலைகிறது. விளம்பரம் பண்ணிக் கல்யாணம் பண்ணியும் மணவாழ்க்கை மனமொத்ததாக அமையவில்லையே என்று மனவருத்தப்படுகிறார்கள்.

மணமகள் தேவை என்று விளம்பரப் படுத்திய மண மகன் பின் கண்டமுறையில் விளம்பரப் படுத்தி இருந்தால் இத்தகைய அவதி ஏற்படுமா, நீங்களே சொல்லுங்கள்.

## கீழ்க்கண்ட யோக்யதாம்சங்கள் கொண்ட மணமகள் தேவை

1. நான் தினம் காலையில் எட்டு மணிக்குத் தான் எழுந்திருப்பேன். ஏன் இத்தனை நாழி என்று மணமகள் என்னுடன் சண்டைபிடிக்கக் கூடாது.

2. மார்க்கட்டுக்குப் போனால், அழுகலும், சொத்தையுமான கறிகாய் தான் எனக்கு வாங்கத் தெரியும். அதற்காகக் கறிகாயை என் முகத்தில் வீசி எறியக் கூடாது.

3. நான் திடுதிடுப்பென்று, முன்னறிவிப்பின்றி பத்து சிநேகிதர்களுக்குக் குறையாமல் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வருவேன். "ரேஷன் இல்லையே, நான் எப்படிச் சமைப்பேன்" என்று சொல்லாமல் கால் மணி நேரத்துக்குள் சமைக்கத் தெரியவேண்டும்.

4. நான் மாமனார் வீட்டுக் காரர்களை எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது குறை கூறிக் கொண்டு தான் இருப்பேன். அதற்காக என்னிடம் கோபித்துக் கொண்டு உண்ணா விரதம் இருக்கக் கூடாது.

5. சாயந்திர வேளைகளில் நான் காரியாலயத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பும் வேளையைப் பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியாது. "ஐந்து மணிக்கு வந்து விடுவேன். சினிமா போகத் தயாராக இரு" என்று சொல்வேன். அன்று என்றுதான் பத்து மணிக்கு வீட்டுக்குத் திரும்புவேன். "எனக்காகக் காத்திருக்க வேண்டாம், நான் ஒரு நண்பன் வீட்டில் சாப்பிட்டு விட்டுப் பத்து மணிக்குத்தான் திரும்புவேன்" என்று சொல்லுவேன்.

ஆனால் அன்று என்று தான் ஐந்து மணிக்கே வந்து நிற்பேன்.

ஆக இம்மாதிரி விளம்பரத்தில் குறிப்பிட்டுவிட்டால் தகராறுக்கே இடம் இல்லையல்லவா? அதே மாதிரி மண மகளும் விளம்பரம் செய்துவிடலாம்.

1. எனக்குப் புருஷனுக்கு மாத்திரம் தான் சமைத்துப் போடத் தெரியுமே யொழிய வீட்டுக்கு வரும் நண்பர் களுக் கெல்லாம் சமைத்துப் போடத் தெரியாது, முடியவும் முடியாது.
2. என்னைக் கண்டால் என் தாயாருக்கு உயிர். ஆகவே வாரத்திற்கு ஒரு நடை என் தாயார் என்னைப் பார்க்க வந்து கொண்டுதான் இருப்பாள். இதற்குத் தடை சொல்லக் கூடாது. ஆனால் ஒன்று. வந்தால் தடவைக்கு ஏழு நாளைக்கு மேல் தங்கமாட்டாள்.
3. "ஆயிரம் பொய் சொல்லி தாலியைக் கட்டு" என்னும் பழமொழியில் என் தகப்பனாருக்கு அதிக நம்பிக்கை உண்டு. அதற்காகப் பின்னால் என் தகப்பனாரை எனக்கெதிரில் இடித்துக் காட்டிக் கொண்டிருக்கக் கூடாது.
4. ஏதாவது சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போவ தாய் இருந்தால் நான் டிரஸ் பண்ணிக் கொள்ள பன்னிரண்டு மணி நோட்டீஸாவது கொடுக்க வேண்டும். அப்படி கொடுக்காமல் நான் தயாராக இல்லை என்று என் மீது குற்றம் சொல்லிப் பிர யோசனம் இல்லை.

ஆக இம்மாதிரி எல்லா யோக்யதாம்சங்களையும் குறிப்பிட்டு விளம்பரம் பண்ணிக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் தகராறு ஏன் வருகிறது, தாம்பத்யக் கலகம் தான் ஏன் வருகிறது?

திருடுவது, பிறரைத் துன்புறுத்துவது, ஏமாற்றுவது முதலிய காரியங்கள் எப்படி குற்றங்களோ, அப்படியே தமிழ் பாஷையின் மீது அன்பில்லாமல் இருத்தல், தேசீய பாஷையாகிய ஹிந்தியின் மீது ஆசை இல்லாமல் இருத்தல், தான் பிறந்த ஊரின் மீது வாஞ்சை இல்லாமல் இருத்தல் ஆகிய இவையும் குற்றங்களே ஆகும். ஆனால் தற்போதைய நிலையில் முன் சொன்னவை தான் குற்றங் களாகக் கருதப் படுகின்றனவே யொழிய பின் சொன்ன வை குற்றங்களாகக் கருதப் படுவதில்லை. முன் சொன்ன குற்றங்களைச் செய்தவர்களைத் தண்டிக்கச் சிறைச்சாலைகள் இருக்கின்றனவே யொழிய பின் சொன்ன குற்றங்களைச் செய்தவர்களைத் தண்டிப்பதற்குச் சிறைச்சாலைகள் கிடையாது.

இன்னும் கொஞ்ச காலம் போனால் இந்த நிலைமை கட்டாயம் மாறிவிடும். திருடர்களையும் கள்ளர்களையும் தொலைந்து போகிறது என்று விட்டாலும் விடுவார்கள். ஆனால் தமிழன்பில்லாதவர்களையும், ஹிந்தி அன்பில்லா தவர்களையும் தண்டிக்காமல் விடமாட்டார்கள். கட்டா யம் சிறைச்சாலைக்கு அனுப்பி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்கள்.

தாய் பாஷை மீது அன்பில்லாதவர்களையும், தேசீய பாஷை மீது அன்பில்லாதவர்களையும் அனுப்புவதற்கு நான் சரியான சிறைச்சாலை ஒன்று கண்டு பிடித்திருக் கிறேன். கோடைக்கானல் மலையடிவாரத்தில் பெரிய குளம் என்று ஒரு ஊர் இருக்கிறது. அந்த ஊர்தான் இப்படிப்பட்ட குற்றவாளிகளை அனுப்புவதற்குச் சரியான சிறைச்சாலை.

சிறைச்சாலையின் நோக்கத்தைப் பற்றி இரண்டு வித அபிப்பிராயங்கள் இருக்கின்றன. குற்றவாளிகளைத் துன் புறுத்துவது தான் சிறைச்சாலையின் வேலை என்று ஒரு சாரார் அபிப்பிராயப் படுகிறார்கள். இது பழைய காலத்து அபிப்பிராயம். இதை யாரும் இப்பொழுது ஒப்புக் கொள்

வதில்லை. சிறைச்சாலையின் நோக்கம் குற்றவாளிகளைச் சீர்திருத்துவது என்பது தான் தற்கால அபிப்பிராயமும், சரியான அபிப்பிராயமுமாகும். அந்த நோக்கத்தைக் கொண்டு தான் பாஷாபிமானம் இல்லாதவர்களையும், தேசாபிமானம் இல்லாதவர்களையும் பெரிய குளத்துக்கு அனுப்ப வேண்டும் என்கிறேன்.

பெரியகுளவாசிகள், அதிலும் அங்குள்ள யுவர்களும், யுவதிகளும், தாய் பாஷையின் மீதும் ஹிந்தி பாஷையின் மீதும் அத்தனை ஆர்வமாக விளங்குகிறார்கள். அவர்களைப் பார்த்தாலே போதும் அந்தக் காற்று நமக்கும் அடித்து விடும். நாமும் உடனே தாய் மொழி, தேசமொழி இரண்டின் மீதும் உடனே பற்றுக்கொள்ள ஆரம்பித்து விடுவோம்.

பெரியகுளத்தில் ஹிந்தி பிரசார சபா, இளைஞர்களின் கலாநிகேதனம் என்று இரண்டு சங்கங்கள் சேர்ந்து வேலை செய்து வருகின்றன. இந்த இரண்டு சங்கங்களுக்கும் இரண்டு உற்சாகிகள் காரியதரிசிகளாக விளங்குகிறார்கள். ஸ்ரீ சோம சுந்தரேஸ்வரன், ஸ்ரீ சீனிவாசன் ஆகிய இந்த இருவரும் சேர்ந்து தங்கள் தலைவர் டாக்டர் பிச்சுமணி அவர்கள் உதவி கொண்டு ஊரை இப்படிச் சிறைச் சாலையாக மாற்றி விட்டார்கள்.

கலாநிகேதனத்தின் ஐந்தாவது ஆண்டு விழாவுக்கு வந்திருந்து ஏதாவது பேசினால்தான் விடுவேன் என்று கலாநிகேதன இளைஞர்கள் வற்புறுத்தவே நான் வேறு வழியின்றி அழைப்பை ஒப்புக்கொண்டு பெரியகுளம் சென்றேன்.

பெரிய குளம் வாசிகள் எனக்கு அளித்த வரவேற்பைக் கண்டு நான் மலைத்தே விட்டேன். தெருக்களில் அங்கங்கே இந்த வீட்டு மாடியிலிருந்து எதிர்த்த வீட்டு மாடிக்கு பெரிய தோரணங்கள் கட்டி அதில் 'நாடோடியே வருக!' என்று எழுதியிருந்தார்கள். நான் எந்தப் பக்கமாக வருவேன் என்று அவர்களுக்குச் சந்தேகமாக இருந்தது போல் இருக்

கிறது. ஆகவே இரண்டு பக்கங்களிலும் "நாடோடியே வருக!" என்று எழுதியிருந்தார்கள்.

அன்று நான் பேசிய கூட்டத்திற்கு அந்தச் சின்ன ஊரிலிருந்து ஆயிரத்திற்கு மேற்பட்டவர்கள் வந்திருந் தார்கள். இரண்டு வீட்டிற்கு மிடையே இருந்த பெரிய தொரு மைதானத்திற்கு அவர்கள் ஹிந்துஸ்தானி பள்ளிக் கூடம் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் தான் கூட்டம் நடந்தது. கூட்டத்திற்கு வந்திருந்த பெரும்பான்மையான ஸ்திரீகளுக்கு இடம் போதாமல் அவர்களை எதிரே இருந்த மொட்டை மாடிகளில் உட்கார வைக்க வேண்டிவந்து விட்டது. பெரியகுளம் வாசிகளுக்கு அத்தனை தமிழ் அபிமானம்.

எனக்கே ஒரு வழக்கம். யார் என்ன நல்ல காரியம் செய்தாலும் அதை உடனேயே பாராட்டி விடமாட்டேன். அதைக் குறித்து குறைவாகப் பேசினால்தான் இன்னும் அதிக ஊக்கம் எடுத்துக் கொண்டு வேலை செய்வார்கள் என்று குறைத்தே பேசுவேன். என் தம்பி நூற்றுக்கு தொண்ணூற்றேழு மார்க் வாங்கினால் கூட நான் புகழ மாட்டேன். "என்னடா மார்க் வாங்கி இருக்கிறாய் முட்டாளே!" என்று இழித்துக் கூறுவேன்.

கிட்டத்தட்ட இத்தகைய காரியத்தை நான் பெரிய குளத்தில் செய்து விட்டேன். அத்தனை திரளாகக் கூட்டத் திற்கு வந்திருந்தார்களே என்று அவர்களைப் பாராட்டாமல் பொதுவாகவே தமிழையும் தமிழ் எழுத்தாளர்களையும் தமிழர்கள் சரியாகவே ஆதரிப்பதில்லை என்று ஒரு பெரிய புராணம் வாசித்தேன் இதற்குச் சான்றாக புள்ளி விவரங் களும் எடுத்துக் காண்பித்தேன்.

தமிழர்கள் வருஷத்திற்கு தலைக்கு ஒரு காலணா கொடுத் தால் கூட தமிழ் எவ்வளவோ அபிவிருத்தி அடைந்து விடும் என்றும் தமிழர்கள் அதுகூட செய்வதில்லை என்றும் இடித் துக் காட்டினேன். ஆனால் இதைக் குறித்து அங்கு வந்தி ருந்தவர்கள் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை. நான்

சொன்னது எல்லாவற்றையும் ஹாஸ்யமாகவே எடுத்துக் கொண்டு அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்களே யொழிய, என்னடா இவர் நம்மை இப்படி இடித்துக் காண் பிக்கிறாரே என்று துளிகூடக் கவலைப் படவில்லை.

ஆனால் காரியதரிசிகள் நடுங்கிவிட்டார்கள். "ஐயா! எங்கள் ஊர்வாசிகளைப் போல் இத்தனை உற்சாகம் உள்ள வர்கள் வேறு எங்கும் கிடையாது. அப்படி இருக்க அவர் களைப் போய் குற்றம் சொல்லி விட்டீர்களே. சரி பரவா யில்லை. இராத்திரி நடக்கப் போகும் நாடகக் காட்சிகளுக்கு உங்களைத் தலைவராகப் போடுகிறோம். அப்பொழுது இப் பொழுது சொன்னது எல்லாவற்றிற்கும் பிராயச்சித்தமாக ஏதாவது சொல்லி வையுங்கள். இல்லையோ—" என்று பயமுறுத்தினார்கள்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 27 மைலுக்கு அப்பால் உள்ள இந்த ஊரில் இப்படி இவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டோமே என ஒரு கணம் நினைத்தேன். நான் எங்கு போனாலும் "நானும் வறேன் அப்பா" என்று ராகம் பாடும் அனு அன்று நான் பெரிய குளத்திற்குப் புறப்பட்ட பொழுதும் அப்படித் தான் தானும் வருவேன் என்று பிடி வாதம் பிடித்தாள். அனுவையாவது துணைக்கு அழைத்து வந்திருக்கலாமே என்று அப்பொழுது தான் நினைத்தேன். ஆனால் நினைத்து என்ன பயன்? எப்படியோ தன்னந் தனி யாக அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டேன். ஆகவே வேறு வழி இன்றி அப்படியே பேசுவதாக ஒப்புக் கொண்டேன்.

இராத்திரி நடந்த நாடகங்களும் அதை அந்த சங்க வாசிகள் நடித்த விதமும் மனதைக் கொள்ளை கொள்ளு வனவாக இருந்தன. 'வாத்தியார் படும்பாடு' என ஒரு நிகழ்ச்சியைக் காரியதரிசி சீனிவாசன் அவர்களே எழுதி உணர்ச்சி ததும்ப நடித்துக் காட்டிய போது எல்லாரும் உணர்ச்சி வசப்பட்டு, "ஆகா எலிமெண்டரி ஸ்கூல் உபாத் தியாயர்கள் இத்தனை சிரமப்படுகிறார்களா? அவர்களை இனி

நாம் சிரமப் படுத்தக் கூடாது. நாம் இனி நம் வீட்டுக் குழந்தைகளை எலிமெண்டரி ஸ்கூலுக்கே அனுப்பக் கூடாது. நேரே ஹைஸ்கூலுக்கு தான் அனுப்பவேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

நாடகங்கள் முடிய பன்னிரண்டரை மணி ஆகிவிட்டது. அதற்குமேல் நான் பேசிய பேச்சில் நான் மாலையில் சொன்னது எல்லாம் இன்னும் மேற்கொண்டு அவர்களை உற்சாகம் மூட்டுவதற்காகச் சொன்னது என்றும் பெரிய குளம் வாசிகள் சம்பந்தப்பட்ட வரையில் அத்தனை உற்சாகத்தை நான் வேறு எங்கும் பார்த்தது இல்லை என்றும் உண்மையை ஒப்புக்கொண்டேன்.

உண்மையிலேயே பெரியகுளம் வாசிகள் அத்தனை உற்சாகம் மிகுந்து காணப்படுகிறார்கள். அன்று மாலை நடந்த கூட்டத்திற்கு தலைமை வகித்த ஸ்ரீசேஷாசல சர்மா அவர்கள் ஒரு தமிழ் பண்டிட் என்றே என்னால் நம்ப முடிய வில்லை. அத்தனை தெளிவாகவும் புரியும் படியாகவும் அவர் பேசினார்.

கலா நிகேதனத்தின் அங்கத்தினர்கள் மட்டும் அல்ல, மற்ற எல்லாருமே தமிழ் எழுத்தாளர் என்ற முறையில் என்னை கௌரவிப்பதற்காகப் போட்டி போட்டார்கள். "எங்கள் வீட்டில் தான் சாப்பிடவேண்டும்" என்றார் ஒருவர். "இல்லை, எங்கள் வீட்டில் தான்" என்றார் இன்னொருவர். "உங்கள் இரண்டு பேர் வீடும் அல்ல, எங்கள் வீடுதான்" என்றார் மூன்றாவது ஒருவர். இந்த ரேஷன் காலத்தில், சாப்பாடு கிடைப்பது கஷ்டமாக இருக்கும் காலத்தில், இப்படி யார் நம்மைக் கூப்பிடப்போகிறார்கள் என்று நான் எல்லார் வீட்டிலுமே சாப்பிடத் தயாராக இருந்தேன். ஆனால் காரியதரிசி எனக்குச் சாப்பிடுவதற்காகக் கொடுத்த நேரம் எண்ணி அரைமணி நேரம் தான். மாலைக் கூட்டத்தின் முடிவுக்கும் இரவு நடந்த நாடகக்காட்சிகளின் ஆரம்பத்திற்கும் இடையே இருந்த அரைமணி நேரம் தான். ஆகவே நான் ஒரே ஒரு வீட்டில் தான் சாப்பிட முடிந்தது.

அந்த ஊர் வக்கீல் ஸ்ரீ ராமசாமி அய்யர் வீட்டில்தான் நான் அந்த ஒரே வேளை சாப்பாட்டை வைத்துக் கொண்டேன். அந்த ஒரே வேளையிலேயே பத்து வேளை சாப்பிட வேண்டிய சாப்பாட்டை அவர் போட்டு சாப்பிடும்படி ஹிம்ஸித்து விட்டார்.

ஆக தமிழ் மீது இத்தனை ஆர்வம் காட்டும் பெரிய குளம் வெகு சீக்கிரமே தமிழ் உலகத்தில் முக்கியமானதொரு ஸ்தானத்தை வகிக்க ஆரம்பித்தால் நாம் ஆச்சரியப்படு வதற்கு இல்லை.

கடைசியாக ஒரு வார்த்தை. பெரிய குளத்துச் சிறுமி களுக்கு இருக்கும் தைரியம் வேறு யாருக்கும் இருக்காது என்று தோன்றுகிறது. ஏழு வயது எட்டு வயது மேற்படாத வாண்டுகள் போட்டி போட்டுக்கொண்டு அத்தனை பெரிய கூட்டத்துக்கு எதிரே தைரியமாகப் பாட முன் வந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அத்தனை தைரியம் அவர்களுக்கு அவசியம் தானா என ஒரு கணம் யோசித் தேன். ஆனால் நாளைக்குக் கல்யாணம் ஆகி புருஷன் வந்தால் அவனை எதிர்த்துப் பேசுவதற்குத் தைரியம் வேண்டாமா என்று எண்ணி என்னை நானே சமாதானப் படுத்திக் கொண்டேன்.

# நாடோடி எழுதிய நூல்கள்

## நாடகமே உலகம் (மூன்றும் பதிப்பு) ரூ. 3

"In these articles the author has demonstrated with what great ease a clever writer can humorously portray the faults and foibles of our society. A score of such books can do more social reform than a thousand platform politicians" என்று இப்புத்தகத்தைப் பற்றி இந்தியன் எக்ஸ்பிரஸ் கூறுகிறது.

## இதுவும் ஒரு பிரகிருதி (இரண்டாம் பதிப்பு) ரூ. 3

"சில வக்ர சுபாவங்களைக் கூர்மையாகக் கவனித்துள்ள இந்த ஆசிரியர் தமக்குள்ள ஒரு அலாதியான திறமையுடன் ஹாஸ்யம் ததும்ப எழுதியிருப்பதை ரஸிக்காமல் சிரிக்காமல் படிக்க முடியாது" என்று தினமணிப் பத்திரிகை இப்புத்தகத்தைப் புகழ்ந்துள்ளது.

## பிழைக்கும் வழி (இரண்டாம் பதிப்பு) ரூ. 2-8-0

"இது ஒரு சிறிது காலத்திற்குத் தோன்றி நின்று பின் மறையும் நூல்கள்போல் அல்லாமல் என்றென்றும் நிலைத்து நிற்கக்கூடிய புத்தகமாய் இருக்கும். இதை, இதில் இரண்டாவது பதிப்பு தோன்றியிருப்பதே மெய்ப் படுத்தும்" என்று அகில இந்திய ரேடியோ இந்தப் புத்தகத்தைப் பற்றிக் கூறுகிறது.

## ஒரு நாள் கூத்து (இரண்டாம் பதிப்பு) ரூ 3

"Witty, philosophical and in everyway humane, Nadodi is a class Tamil writer without any rival in his way of writing in Tamil to-day. I wish he gives more books of this type" என்று விப் என்னும் கல்கத்தாப் பத்திரிகை இந்தப் புத்தகத்தைப் புகழ்கிறது.

## படித்த பெண் வேண்டாம் ரூ. 3

படித்த பெண்களைக் கண்டாலே நாடோடிக்கு நடுக்கம்தான். ஏன் என்று இந்தப் புத்தகத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

## அட பரமசிவா ரூ. 3

"வாழ்க்கையைச் சீர்திருத்த முயல்வதில் எழுத்தாளர்கள் பல முறைகளையும் கையாளுகிறார்கள். வாழ்க்கையில் தான் கண்டு சிரிப்பதை பிறரும் கேட்டு சிரிக்க வைப்பது இவற்றில் ஒன்று. இம் முறையைப் பயன்படுத்திக் கொள்வதில் நாடோடி கை தேர்ந்தவர்" என்று திருச்சி ரேடியோ இப் புத்தகத்தைப்பற்றிக் கூறுகிறது.

## எங்கள் குடும்பம் பெரிது ரூ. 2-8-0

இந்தப் புத்தகம் ஒவ்வொரு குடும்பத்தாரும் படித்து மகிழ வேண்டிய புத்தகம். சாதாரணமாக ஒவ்வொரு குடும்பத்திலும் நடக்கும் எத்தனையோ நிகழ்ச்சிகளை வெகு ஹாஸ்யமாக இப் புத்தகம் சித்தரிக்கிறது. இதில் உள்ள யுத்த ஆரம்பம், யுத்தம் நடக்கிறது, யுத்தம் வலுக்கிறது, இறுதிவெற்றி இந் நான்கு அத்தியாயங்களும் ஹாஸ்ய சிகரத்தை எட்டிப் பிடிக்கின்றன என்று சொன்னாலும் மிகையாகாது.

## ஹே, அனுராதா ரூ. 3

"நாடோடியின் புத்தகத்தைப்பற்றி மதிப்புரை சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. படித்துத் தொலைக்க வேண்டிய புத்தகங்கள் அவர் எழுதுபவை எல்லாம். படிக்காவிட்டால் நஷ்டம் அவருக்கல்ல" என்று அகில இந்திய ரேடியோ திருச்சி நிலையம் இப் புத்தகத்தைப் பற்றிக் கூறுகிறது.

## என்னைக் கேளுங்கோன்னு! ரூ. 4

"தமிழர்களுக்குச் சிரிக்கத் தெரியாது, ஹாஸ்ய நுட்பத்தை அனுபவிக்கும் இதயமில்லாதவர் என்ற கூற்றைப் பொய்யாக்கிய ஒரு சில எழுத்தாளர்களில் நாடோடி ஒருவர்" என்று அகில இந்திய ரேடியோ இப் புத்தகத்தைப்பற்றிக் கூறுகிறது.

## குடும்ப ரகசியம் ரூ. 3

நாடோடி எழுதிய ரேடியோ நாடகங்களின் தொகுப்பு இந்தப் புத்தகம். கால்மணி நாடகங்களும், ஒரு மணி நாடகங்களும் உள்ளன. இதில் வெளியாகியுள்ள "ஏழையாவது எப்படி!" என்னும் ஒரு மணி நாடகம் இதுவரை அச்சில் வெளி வந்ததே இல்லை.

## ஸ்திரீகள், ஜாக்கிரதை! துக்கடா சீரிஸ் 1 ரூ. 1

## கிழவியும், குமரியும் துக்கடா சீரிஸ் 2 ரூ. 1

மேலேயுள்ள இரு புத்தகங்களும் நூற்றுக்கணக்கான ஹாஸ்ய சம்பவங்களும், ஆழ்ந்த கருத்துக்களும், அறிவு விஷயங்களும் கொண்டவை. நாடோடி தொகுத்தவை.